# ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
# ஸ்ரீ மஹா பெரியவருடன் கைங்கர்ய சேவை செய்து
# சன்னியாஸ்ரம தீக்ஷைஷ பெற்று
# அவருடனே இருந்த மகாத்மாக்களின் வரலாறு



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

**ஜகத்குரு ஸ்ரீமஹா பெரியவருடன்**

கைங்கர்ய சேவை செய்து

சன்னியாஸ்ரம தீக்ஷ்கைஷ பெற்று

அவருடனே இருந்த

# மகாத்மாக்களின்

# வரலாறு

## முக உரை

காஞ்சி மஹாஸ்வாமிகள் பட்டமேற்று பாரத தேசம் அனைத்தும் பூஜையுடன் யாத்திரைகள் கால்நடையாகவே சென்ற போது பல அணுக்க தொண்டர்கள் அவர்களுக்கு தினசரி தங்களால் முடிந்த கைங்கர்யங்களை செய்து இரவு பகல் என இல்லாது யாத்திரைகளை மேற்கொண்டு தங்களது வயது முதிர்ந்த காலத்திலும் தங்களது ஆத்மாவையும் தேக சரீரத்தையும் வீணாக்கிக்காமல் அவர் காலத்திலேயே ஸன்னியாஸ்ரம திக்ஷ்க்ஷதை பெற்று அவரை தரிசனம் செய்து கொண்டும் அவரது யாத்திரையின் வியாஸ பூஜையிலும் கலந்து கொண்டனர். வயது முதிர்வு காரணமாக பலர் காஞ்சி க்ஷேத்திரத்திலேயே முக்தி அடைந்து அனைவருக்கும் காஞ்சி மடத்தைச் சேர்ந்த உபநிஷத் மடத்திலேயே அதிஷ்டானம் அமைக்கப்பட்டுள்ளது. இந்த மடம் மிக்க புகழ் வாய்ந்தது. இந்த மடத்தின் ஸ்தாபகர் உபநிஷத் ப்ரம்மேந்திரர் இவர் ஒருவர் மட்டும் தான் எல்லா உபநிஷத்திற்கும் பாஷ்யம் எழுதியுள்ளவர். இங்குள்ள கோயில் ஸன்னதியில் அவரால் கல்லில் எழுதப்பட்ட இராமர் யந்திரம் உள்ளது. இது மிக்க சக்தி வாய்ந்ததும் அபூர்வமானதாகும். ராம பக்தரான ஸ்ரீ தியாகராஜரும் உபநிஷத் ப்ரம்மேந்திரரும் சம காலத்தில் வாழ்ந்தவர்கள் இவர் காஞ்சிக்கு வந்துள்ளார் இப்படிப்பட்ட புண்ணிய பூமியில் தான் ஸ்ரீமடத்தைச் சேர்ந்த சன்னியாஸிகளுக்கு அதிஷ்டானம் அமைக்கப்பட்டு அவரவர் உறவினர்கள் சுவாமிகள் சித்தியான நாட்களில் வந்து ஆராதனை பூஜைகளையும் தவறாது நடத்திச் செல்கின்றனர். எனவே தான் இம்முக்கிய பல ஸன்னியாஸிகளின் வரலாறு மஹா ஸ்வாமிகளின் ஜெயந்தியில் அவரது அதிஷ்டானத்தில் சமர்ப்பிக்கப்பட்டு ஸ்ரீபெரியவாள் ஜெயந்தியில் 32ஆம் ஆண்டாக நடைபெறும் வேத சாஸ்திர வாக்கியார்த்த சதஸை நடத்தும் பக்தர்களுக்கு காணிக்கையாக இந்த ஆண்டு அர்பணிக்கப்படுகிறது.

இப்படிக்கு,

வேதசாஸ்திர வாக்கியார்த்த சதஸ் அமைப்பாளர்கள்

## பொருளடக்கம்



மஹேஸ்வரபுத்ராபாத நமஸ்தே!!



ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ பெரியவா செய்யும் தினப்படி
ஸ்ரீ சந்திரமௌளீஸ்வர பூஜை



மஹாஸ்வாமிகள் தேரில் பக்கத்தில் இருபெரியவாள்



காமகோடி பீடாதிபதி ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்

**"மக்களின் இருளை நீக்கி ஒளிவீச**
**இருள் நீக்கியில் அவதரித்த மகான்"**




காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கர விஜயேந்திர
சரஸ்வதி ஸ்வாமிகள்

“இளம் தலைமுறை மக்களை
நல்வழி படுத்த தோன்றிய மகான்”

**பரம பூஜ்ய ஸ்ரீ ஸித்தானந்த தீர்த்த ஸ்வாமிகள்**
**(சுப்பிரமணியம் என்ற அண்ணா ஸ்வாமிகள்)**
**பரம பூஜ்ய ஸ்ரீகுவலயானந்த தீர்த்த ஸ்வாமிகள்**
**(ஸ்ரீ தம்புடு ஸ்வாமிகள்)**



இந்த இருசகோதர மகான்களும் அவதரித்த ஸ்தலம் தக்ஷிக்ஷிண பத்ரிகாஸ்ரமம் எனப்படும் இலந்துறை புண்ணிய சேஷத்திரம் ஆகும். கும்பகோணம் காரைக்கால் மார்க்கத்தில் திருநீலக்குடியிலிருந்து 5 கிலோ மீட்டரில் உள்ளது. இந்த இடத்தை வ்யாஸஸ்ரமம் எனவும் அழைப்பார்கள். இங்கு பரமேஸ்வரன்ஸீந்தரேசன் என்ற பெயரிலும் அபிராமவல்லி என்ற ஸ்ரீபார்வதிதேவியும் அருட்கடாச்சம் செய்து வருகின்றார்கள். இங்கு இலந்தை மரங்கள் அதிகமாக உள்ளதால் பதரிசேஷத்திரம், பதரிகாஸ்ரமம் என கூறுவார்கள். இந்த சேஷத்திரத்துக்கு ஆதிபத்ரிகாச்ரமம் தக்ஷ்க்ஷண பத்ரிகாஸ்ரமம் என்று பெயர் உள்ளது. இங்கு வ்யாஸ பகவான்பதிரி மரங்களின் அடியில் அமர்ந்து வெகு காலம் தபஸ் செய்தமையால் பார்வதி பரமேஸ்வரன் கலியாணகோலத்தில் காட்சி அளித்து இத்தலம் வ்யாஸாச்ரமம் என அழைக்கப்படுகிறது.

மஹா விஷ்ணுவும் பரமேஸ்வரனை தரிசிக்க இங்கு வந்து துளசிமாலா, துளசி ஜபமாலயுடன் நான்கு கைகளுடன் காட்சி அளித்து வருகின்றார். இங்குள்ள இலந்தை மரங்கள் ஒவ்வோர் யுகத்திலும் மாறுகின்றது. புன்னாகவநமாகவும் வகுலாரண்யமாகவும் கதலிவநமாகவும், பதரிவநமாகவும் மாறும். சித்திரபௌர்ணமியில் தான் வ்யாஸ பகவானுக்கு பகவான் பரமேஸ்வரன் தரிசனம் கொடுத்து அருள் புரிந்தார். வ்யாஸ பகவானே இங்கு நகரம், கோவில் குளங்களை நிர்மாணம் செய்து அளித்து உத்ஸவாதிகளையும் நடத்திக் காண்பித்தார். இவ்வளவு மேன்மை பொருந்திய க்ஷேத்திரத்தில் தான். அண்ணா ஸ்வாமிகள், தம்புடு ஸ்வாமிகள் என அழைக்கப்படும் இரு சகோதரர்களான ஸ்வாமிகளும் அவதரித்தனர். இலந்தையில் வசித்து வைதிக கர்மானுஷ்டானங்களை சிரத்தையுடன் கடைபிடித்து வாழ்ந்த ஸ்ரீஸதாசிவய்யர், மாது ஸ்ரீ வேதாம்பாள் தான் இந்த ஸ்வாமிகளின் பூர்வாஸ்ரம தாய் தந்தையர் இவரது தந்தையார் அங்கு உள்ள அரசு பள்ளியில் ஆசிரியராக பணி செய்து வந்தார். இளையாத்தங்குடி பெரியவாள் என அழைக்கப்பட்ட ஸ்ரீ மடத்தின் 65 ஆம் பீடாதிபதியான ஸ்ரீசுதர்ஸன மஹா தேவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் 1850 to 1891ல் கும்பகோணத்தில் முகாம இட்டு இருந்த போது ஸ்ரீ சதாஸிவய்யர் நிறைய குருஸேவை செய்துள்ளார். இவர் சம்பூர்ணமாக ரிக் வேத அத்தியானம் செய்தவர்.

ஸ்ரீ தம்புடு ஸ்வாமிகள் 7.1.28ல் மார்கழி புனர்வசு நக்ஷ்க்ஷத்திரத்தில் அவதரித்தவர். இவருக்கு தாய் தந்தையர் இட்டபெயர் ஸ்ரீ வேங்கிட கோபால கிருஷ்ணன் என்பது

இவருக்கு 3 பூர்வாஸ்ரம சகோதரர்களாக ஸ்ரீ வேங்கிட கிருஷ்ணன், ஸ்ரீவேங்கட நாராயணன் ஸ்ரீவேங்கடகுரு என்பவர்களும் ஸௌராஜலக்ஷ்மி என்ற ஸகோதரியும் உண்டு. இவர்களது குடும்ப குலதெய்வம் ஸ்ரீ வேங்கடாஜலபதி ஆனதால் அனைவர் பெயருடன் வேங்கடம் என்ற பெயர் இணைத்து வந்தது.

ஸ்வாமிகள் திருவிடைமருதூர் பள்ளியில் 4வது பார்ம் வரை கல்வி பயின்றார். கல்வியில் இவருக்கு உள்ள புத்தி கூர்மையையும் ச்ரத்தையும் கருதி இவரது தந்தை இவரை கும்பகோணம் ராஜா வேதகாவ்ய பாடசாலையில் சேர்த்தார். இந்த பாடசாலை காஞ்சி மஹாஸ்வாமிகள் மூதாதையர்களான நாகம்பாஸமேத அத்வைத வித்யாசார்ய மஹாராஜாஸாஹேப் பகவான் ஸ்ரீ கோவிந்த திக்ஷிதரால் காவேரி தீர்த்தக் கரையில் 1542ல் ஸ்தாபிக்கப்பட்டது. ஸ்வாமிகள் இப்பாடசாலையின் ஸ்ரீ முத்கலப்ரம்ம ஸ்ரீ ராமாச்சார்யிடம் 1943 முதல் 1950 வரை ஸம்பூர்ணமாக ரிக்வேதம் அத்யானம் செய்துள்ளார். இவர் கடுமையான பிரம்மச்சாரிவ்ரதத்தை மேற்க் கொண்டவர். ஆசாரத்தை மிக கடுமையாக அனுஷ்டித்து மடி, தவறு ஏற்பட்டால் உடனே ஸ்னானம், உபவாசம் மேற்க் கொள்வார். ஸ்ரீ வித்யாஸ உபாசராக விளங்கினார். தனது பூர்வாஸ்ரம தாய் தந்தையர்களைப் போலவே காஞ்சி ஆச்சாரியாளர்களிடம் மிக்க குரு பக்தி கொண்டவர்.

இவர் 1990ல் ஓர் நாள் தன்மூத்த சகோதரர் ஸ்ரீ சுப்பிரமணியத்துடன் காஞ்சி ஸ்வாமிகளை தரிசித்து தங்களது பூர்விக விபரங்களை தெரிவித்து தங்களுக்கு

துரியாஸ்ரமம் செய்து உதவ வேண்டும். என பிரார்த்தித்துக் கொண்டனர். மஹாஸ்வாமிகள் மௌனமாக இருந்து பதில் ஏதும் கூறாது இருந்தார். உடனே இருவரும் அவரை நமஸ்கரித்துவிட்டு கைலாசநாதர் கோயில் அருகே உள்ள உபநிஷத் மடம் சென்றனர். சிறிது நேரம் கழித்து மஹா ஸ்வாமிகள் தனது அணுக்க தொண்டர் ஸ்ரீ கண்டனைக் கூப்பிடச் சொன்னார். அவரும் விசாரித்து இங்கிருந்து அவர்கள் காமாக்ஷி கோயில் சந்திரசேகர சாஸ்திரிகளை பார்க்கச் சென்றனர் என்றார். காலை வேளைகளில் நான் தினமும் மஹா பெரியவாளை தரிசிக்க 4மணி அளவில் சென்று 9மணி அளவு வரை அவரிடமே எதிரில் இருந்து வருவேன். எனவே ஸ்ரீகண்டன் என்னைக் கூப்பிட்டு காமாக்ஷி கோயிலில் அருகே உள்ள சாஸ்திரி வீட்டிற்குச் சென்று அவர்களை அழைத்து வர கூறினார். நானும் அவரை சென்று சந்தித்தபோது அவர்கள் இருவரும் அம்பாள் தரிசனம் செய்து உபநிஷத் மடம் சென்று விட்டதாகவும் தான் தனது மகனை அங்கு அனுப்பி அழைத்து வரச் செய்வதாக கூறினார்.

சுமார் ஒரு மணி நேரத்திற்குள் இருவரும் ஸ்ரீ மஹா பெரியவாளை வந்து தரிசித்த போது பெரியவாள் அவர்களிடம் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து பின்பு ஸ்ரீமடத்திலேயே இருந்த நாஸிக் சுவாமிகளை அழைத்து அண்ணன் தம்பி ஸ்வாமிகளுக்கு ப்ரணவஜபம், மஹாவாக்யோபதேசம் பூர்விக துரியாஸ்ரமம் கொடுக்கச் சொல்லி 12.5.87 அன்று சன்ஸியாஸ்ரமம் வழங்கப்பட்டது. அண்ணன் ஸ்வாமிகளுக்கு ஸ்ரீஸித்தானந்த திர்த்தர் எனவும் தம்புடு ஸ்வாமிகளுக்கு ஸ்ரீகுவலயானந்த தீர்த்த

சுவாமிகள் எனவும் திக்ஷ்க்ஷாநாமம் வழங்கப்பட்டது. அண்ணன் சுவாமிகளான ஸித்தானந்த தீர்த்த சுவாமிகள் 17.10.1908ல் அவதரித்தவர்.

அண்ணன் ஸ்வாமிகள் தினசரி இரண்டு வேளைகளிலும் மஹாபெரியவாள் இருக்கும் இடம் வந்து அவரை நமஸ்கரித்துச் செல்வார். அப்போது தனது ஒரு காலால் முட்டி போட்டுக் கொண்டு நமஸ்கரிக்கும் போது மிக்க பலமாக முட்டி தரையில் படும் சத்தமே கேட்கும். மேலும் ஸ்ரீபெரியவாள் அருகே உள்ள கோவில்களுக்குச் செல்லும் போது இவரும் உடன் செல்லுவார். இவர் காஞ்சியிலேயே இருந்து உடல்நலம் சரியின்றி 1994ல் ஆகஸ்டு 25ஆம் தேதி சித்தி அடைந்து அவரது அதிஷ்டானம் காஞ்சி உபநிஷத் மடத்தில் அமைந்துள்ளது.

தம்புடு ஸ்வாமிகள் பெரும்பாலும் மௌனநிலையிலே இருந்து லக்ஷ்க்ஷக் கணக்கில் ஜபங்கள் செய்து வருவார். தன் காரியங்களை மற்றவர் எதிர்பாராது தானே செய்து கொள்பார். இவரை எவரும் எளிதில் நெருங்கிட முடியாது. ஆசார்யாளர்களை விட்டு எப்போதும் பிரியாது அனைத்து வியாஸ பூஜை சாதுர் மாஸவ்ரதங்களை அவர்களுடனேயே ஸ்ரீமடத்தில் அனுஷ்டித்து வருகிறார்.

1919 ஆம் ஆண்டு ஸ்ரீபெரியவாள் இலந்தைக்கு முகாம் சென்று 4 நாட்கள் இவர்கள் இல்லத்திலேயே தங்கி சந்திரமௌளீஸ்வரர் பூஜை நன்கு நடந்தது. பெரியவாள் கிளம்பும் போது இவர்களது தாய் தந்தையினர்

பெரியவாளிடம் இந்த கருணாகடாக்ஷக்ஷம் தங்களது குடும்பம் வருங்கால குடும்பத்தார்கள் ஞாபகம்படுத்திக் கொள்ள அனுக்கிரஹம் புரியும் படி வேண்டிக் கொண்டனர். அப்போது மஹா பெரியவாள் இனிமேல் வருடாவருடம் இவ்வூரில் ஸ்ரீசங்கரஜெயந்தி உற்சவம் நடத்தி இலந்துரை ஸ்ரீஅபிராமவல்லி ஸமேத ஸீந்தரேசர் கோவிலில் உள்ள தக்ஷக்ஷிணாமூர்த்திக்கு அபிஷேகம் ஆராதனை மற்றும் அன்னதானம் பஜனை செய்ய ஏற்ப்பாடு செய்ய உத்திரவு இட்டார். அன்று முதல் கடந்த 96 வருடமாக கோலா கோலமாக நடந்து வருகின்றது. நவராத்திரியில் அம்பாளுக்கு விசேஷ மண்டகப்படியும் நடக்கின்றது.

மஹாபெரியவாளின் காலங்களில் ஸ்ரீமடத்தின் வைதீக காரியங்களை கவனித்து வந்த மாயவரம் ஸ்வர்க்கிய ப்ரம்மஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகள் ஆரம்பகாலங்களில் தம்புடு ஸ்வாமிகளின் குடும்பத்திற்கு வழி காட்டியாக இருந்து வந்தார். அவர் பிரதிவருடம் கோகுலஷ்டமி உற்சவத்தை விஸ்தாரமாக நடத்துவார். அப்போது ரிக்வேத பாராயணம் ஸப்தாகமுறைப்படி மூலப் பாராயணம் பாகவதம் முதலியவைகளை நடத்துவார். அந்த விசேடங்களில் தம்புடு ஸ்வாமிகளும் தவறாது கலந்து கொள்வார். ஆச்சாரியாளின் ஆஞ்ஞைப்படி ஸ்வாமிகளின் சதாபிஷேக நிகழ்ச்சிகளை ஸ்வாமிகளிடம் குருபக்தி கொண்டவர்களான ஸ்ரீசிவசாம்பு அய்யர் குடும்பத்தார் ஸ்ரீகாமாக்ஷியம்மன் கோயிலில் விமரிசையாக செய்வித்தனர். ஸ்வாமிகளிடம் நெருங்கி பழகியவர்களும் மற்றும் ஸ்ரீமடத்தில் கைங்கர்யம் செய்பவர்கள் பலரும் கலந்து கொண்டு நடத்தி ஆசி பெற்றனர்.

இவர் சிறுவயதிலிருந்தே ஸ்ரீஹயக்கிரிவ உபாஸகர் ஆனதலால் அன்றாடம் ஹயக்கிரிவ உபநிஷத் பாராயணம் ஸ்ரீமத்பாகவதம் ஸ்ரீ பகவத் கீதை அஷ்டோத்திரசத உபநிஷத்திலிருந்து தவறாது பாராயணம் செய்து வருகின்றார். அன்றாடம் ஸ்ரீவித்யா உபாஸனையுடன் லலிதா சஹஸ்ரநாமம் த்ரிசதி மூலம் அம்பாளை ஆராதித்து சந்திர தரிசனமும் செய்வார். ஏகாதசி ச்ரவணவிரதம் முதலியவைகளை நிர்ஜல உபவாஸமாக அனுஷ்ட்டித்து வருகிறார். ஆவணி திருவோணவிரதத்தையும் திடமான நம்பிக்கையுடன் அனுஷ்ட்டித்து வருகிறார். ஆசாரியாள் இவரை உபநிஷத் ப்ரஹ்மேந்திர மடத்திற்கும் லிங்கப்பன் தெருவில் உள்ள ஸ்ரீராமப்ரஹம்ம மடத்திற்கும் மடாதிபதியாக நியமித்துள்ளார்கள்.

ஸ்ரீகாஞ்சி ஆச்சாரியாள் ஆஞ்ஞைபடி இவர் இங்கு குறிப்பிடப்பட்டவர்களுக்கு துரியாச்ரமம் அளித்துள்ளார்

1. ஸ்ரீ ஆந்திரா ஸ்வாமிகள்
2. ஸ்ரீ புதுக்கோட்டை ஸ்வாமிகள்
3. ஸ்ரீ ஸதாசிவானந்த தீர்த்த ஸ்வாமிகளான ஸ்ரீகண்டன் ஸ்வாமிகள்
4. ஸ்ரீ சிவசங்கரானந்த ஸ்வாமிகளான ஸ்ரீ அசிக்காடு ஸ்வாமிகள்
5. ஸ்ரீ ஆத்ம போதேந்திர ஸ்வாமிகளான ஸ்ரீ கும்பகோணம் ஸ்வாமிகள்
6. ஸ்ரீ ஸஹஜானந்த தீர்த்த ஸ்வாமிகளான ஸ்ரீஆம்பூர் ஸ்வாமிகள்

இவருடைய குரு, பரமகுரு, பரமேஷ்ட்டிகுரு, பராத்பரகுரு முறையே ஸ்ரீ நாஸிக் ஸ்வாமிகள், ஸ்ரீஓடாச்சேரி ஸ்வாமிகள், ஸ்ரீ மஹாராஷ்டிர ஸ்வாமிகள் ஆவார்கள்.



சுப்பிரமணியம் என்ற அண்ணா சுவாமிகள்



தம்புடு ஸ்வாமிகள் பூர்வாச்ரமம்



தம்புடு ஸ்வாமிகள் - பெரியவாள்

# பரம பூஜ்ய ஸ்ரீ சிவானந்த தீர்த்த ஸ்வாமிகள்
# ( ஸ்ரீ நாஸிக் ஸ்வாமிகள்)



நாஸிக் ஸ்வாமிகள் என ப்ரஸித்தமான நாஸிக் கிருஷ்ணமூர்த்தி அய்யர் க்ருஹஸ்தர் அவர்களின் பூர்வீக கிராமம் ஸ்ரீ புதுப்பெரியவாள் அவதார ஸ்தலமான இருள்நீக்கிக்கு அருகில் தண்ணீர் குள்ளம் சாத்தனூர் பிறகு ஆதிச்சுபுரத்தில் குடியேறினார். இவருக்கு 4 பெண்கள் ஒரு பையன். ஒரு பெண்ணின் பேரன் தான் ஸ்ரீ பெரியவாளிடம் பல ஆண்டுகளாக கைங்கர்யம் செய்து வரும் ஸ்ரீராஜு ஆவார்.

நாஸிக் கிருஷ்ணமூர்த்தி அய்யர் மத்திய அரசு ரூபாய் நோட்டுகள் நாணயங்கள் அச்சிடும் நாஸிக் என்னும் ஊரில் உள்ள அரசு அச்சுக்கூட ஆபிஸில் பல ஆண்டுகள் பணி செய்து ஓய்வுபெற்றார். பணியில் உள்ள போதே மடத்திற்கு வந்து ஆசாரியாளுக்கு தன்னால் முடிந்த பல கைங்கர்யங்களை செய்து வந்தார். திடீர் கோபம்

உடையவர் ஆனாலும் உடனே அதை மறந்து அன்புடன் பழகும் சுபாவம் உடையவர்.

ஸ்ரீஓடாச்சேரி ஸ்வாமிகளின் சிஷ்யராக திகழ்ந்தார் அவர்தான் இவருக்கு துரியாஸ்ரமம் அளித்த பின்பு ஸ்வாமிகள் கும்பகோணம், ராமேச்வரம், திருவானைக்கால் முதலிய சேஷத்திரங்களில் தங்கி தபஸ்செய்து இறுதியில் காஞ்சி மடத்தில் மஹாஸ்வாமிகளின் அதிஷ்டானத்தின் அருகே ஓர் அறையில் தங்கி இருந்தார். பண்டரிபுரம் சென்று மஹா ஸ்வாமிகளுடன் வியாஸ பூஜையில் கலந்து கொண்டார்.இவர் தான் அண்ணா ஸ்வாமிகள், தம்புடு ஸ்வாமிகள் என்று அழைக்கப்பட்டவர்களுக்கும் துரியாஸ்ரமம் வழங்கினார். இவர் உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்ற பின்பு மஹா ஸ்வாமிகளின் முகாம்களுக்கு சென்று பூஜைக்கு தேவையான சந்தனம் தயாரித்தல் தீர்த்தம் நிரம்பி வைத்தல் போன்ற கைங்கர்யங்களை செய்வார். பின்பு வயது முதிர்ந்த பின்பு மஹா ஸ்வாமிகள் அனுக்கிரஹத்துடன் ஸன்யஸம் பெற்று காஞ்சி மடத்திலேயே தங்கி இருந்தார். இவர் இறுதியில் 7-9-1998ல் ஆவணி க்ருஷ்ண பிரதமை காயத்ரி ஜபத்ன்று ஸித்தி அடைந்து அவரது அதிஷ்டானமும் காஞ்சி உபநிஷத் ப்ரஹ்மேந்திராள் ஸ்ரீமடத்திலுள்ளது. பிரதி ஆண்டும் ஆராதனைகளும் சிறப்பாக நடத்தப்படுகின்றது.



## பரம பூஜ்ய ஸ்ரீசுப்பிரமணியேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் (ஸ்ரீ பத்மநாபய்யர் மைலாப்பூர் ஸ்வாமிகள்)



மைலாப்பூர் ஸ்வாமிகள் என்பவர் துறவறம் பூணும் முன்பு பத்மநாபய்யர் என்ற பெயருள்ளவர். மேல்நிலைப்பள்ளி படிப்பு முடிந்த பின்பு ஓர் வங்கியில் பல ஆண்டுகள் பணிபுரிந்து வந்தார். நீண்டகாலமாக மஹாஸ்வாமிகளின் பேரில் தீவிர பக்தி கொண்டு அவர்களது அருகாமை முகாம்களுக்குச் சென்று தரிசிப்பார். ஓய்வுக்குப் பின்பு மைலாப்பூர் சங்கரமடம் நல்ல முறையில் இயங்க தங்கி பணியாற்றி வந்தார். தான் வாழ்ந்த பகுதியில் மைலையில் பெரியவாள் கட்டளைப்படி பிடி அரிசி வசூலித்து அதில் ஓர் பகுதியை காஞ்சி மடத்திற்கு தவறாது சேர்ப்பித்து வந்தார். 1985ல் மஹா ஸ்வாமிகளின் அனுக்கிரஹத்துடன் ஸன்யாஸ ஆஸ்ரமம் தீக்ஷை பெற்றார். அவருக்கு சுப்பிரமண்யேந்திர ஸரஸ்வதி என்ற ஸன்யாஸ பெயர் வழங்கப்பட்டது. காஞ்சி மடத்திலேயே பல வருடங்கள் தங்கி இருந்து சித்தி அடைந்தார்.

# பரம பூஜ்ய ஸ்ரீ தாரகப்ரஹ்மேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் (பாணாம்பட்டு கண்ணன் ஸ்வாமிகள்)



கண்ணன் ஸ்வாமிகள் பிறந்த ஊர் தென் ஆற்காடு ஜில்லாவிலுள்ள பாணாம்பட்டு கிராமம் என்பது பெரும்பாலும் எல்லோரும் இவரை காசி கண்ணன் என்று தான் அழைப்பார்கள். கண்ணன் ஸ்வாமிகள் காஞ்சி மடத்திற்கு கைங்கர்யங்களை செய்தது மடத்திற்கே ஓர் வரப் பிரசாதம் எனக் கூறலாம். இவர் சிறுவனாக இருந்த போது வசந்த கிருஷ்ணபுரத்தில் ஸ்ரீபெரியவாளை தரிசிக்க தாய்தந்தையர்கள் இவரை அழைத்துச் சென்றனர். அங்கிருந்து போது தனக்கு பசிக்கிறது என அழுத படியே தன் தாய் தந்தையர்களிடம் கூறினார். அது பெரியவாள் காதுகளில் கேட்டு அவர் அந்த பையனைப் பார்த்து இனி உனக்கு பசிக்காது அழாதே என்ற உடன் பசி அடங்கி அழுகையை நிறுத்தினார்.இவர் வயது வந்த உடன் சிறிது காலம் ராணுவத்தில் சென்று பணியாற்றி பின்பு அந்த

வேலையையும் விட்டு பெரியவாளிடம் சேர்ந்து கைங்கர்யங்களில் ஈடுபட்டார். முதன்முதலாக பெரியவாளிடம் வந்து தான் மடத்தின் கைங்கர்யங்களில் ஈடுபட ப்ராத்தித்த போது பெரியவாள் காவரி நதிக்கரையில் ஊற்று போட்டு நீரில் அனுஷ்டானம் செய்து கொண்டிருந்தார். உடனே பெரியவாள் கண்ணன் கையை நீட்டச் சொல்லி மூன்று முறை ஜலத்தை அளித்து பருகச் சொன்னார். பின்பு தான் யாத்திரையில் சேர்த்துக் கொண்டார். பின்பு பல ஆண்டுகள் அவருடனேயே முகாம்களுக்கும் சென்று அவர் ஆணைப்படி பல கைங்கர்யங்களில் ஈடுபட்டார். மஹாபெரியவாள் தான் பட்டம் வசித்து வந்த காலங்களில் பண்டைகால மஹாராஜக்களைப் போல பல திருக்கோயில்களை நிர்மாணிக்க எண்ணி அவைகளை கண்ணன் மூலம் நிறைவேற்றினார். முக்கியமாக பெரியவாள் ஆதிசங்கர பகவத் பாதர் விஜயம் செய்த பல முக்கிய சேஷத்திரங்களில் அவரது ஞாபகார்த்தமாக ஆதிசங்கரர் பிம்ப பிரதிஷ்டை பாதுகாபிரதிஷ்டை முதலியவைகளை செய்ய நினைத்து ராமேச்வரத்தில் அக்னி தீர்த்தக்கரையில் ஆதிசங்கர் மண்டபத்தை மஹா பெரியவாளின் உத்திரவு திட்டப்படி 2 ஆண்டு காலம் அங்கேயே தங்கி கண்ணன் ஸ்வாமிகள் கட்டி முடித்தார். முக்கியமாக முதன்முதலில் அலகாபாத் சங்கரமடத்திற்கு டெல்லி கவர்னர் கோபால்ரெட்டி உத்திர பிரதேச கவர்னர் மதன் மோகன் மாளவியா மூலம் அடிக்கல் நாட்டு விழாவில் தங்கத்தினால் ஆன ஓர் கருவி கொண்டு சிமெண்ட் கலக்கும் வேலையை துவக்கி விழாவை துவக்கினார்.

ஆதிசங்கரர் அவதார ஸ்தலமான காலடியில் அவரது நினைவு சின்னமாக ஓர் உயர்ந்த கீர்த்தி ஸ்தம்ப மண்டபத்தை பெரியவாளின் அவ்வப் போதைய ஆலோசனைப்படி கண்ணன் ஸ்வாமிகள் 3 ஆண்டுகள் காலடியில் தங்கி கட்டிமுடித்து 1978ல் சங்கர ஜெயந்தி விழாவில் புதுப்பெரியவாள் ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளால் கும்பாபிஷேகம் செய்விக்கப்பட்டது. மஹா ஸ்வாமிகளின் 5 ஆண்டு வட இந்திய யாத்திரையில் 1980ல் ஓர் ஆண்டு ஸதாரா சங்கர மடத்தில் தங்கியிருந்த போது ஒரே கல்லில் 1008 சிவ லிங்கங்கள் கொண்ட ஓர் சிவலிங்கத்தை தயாரித்து பிரதிஷ்டிக்கப்பட்டது. அங்கு உயரமான படிக்கட்டு அமைத்து பெரியவாளே அதன் மீது ஏறி அபிஷேகம் செய்தார். ஸதாராவில் சாமண்ணா என்ற பெரும் செல்வந்தர் மஹா பெரியவாளை தரிசித்து ஓர் பெரும் தொகை காணிக்கையாக கொடுத்த போது மஹா ஸ்வாமிகள்அதன் மூலம் அவரை சிதம்பரம் நடராஜர் கோயில் போல ஓர் உத்திர சிதம்பரம் என்னும் கோயிலை கட்ட உத்திரவு பிறப்பித்தார். அந்த செல்வந்தர் கண்ணன் ஸ்வாமிகளுடன் ஆருத்ரா தரிசனத்தின் போது அவரையும் அழைத்துக் கொண்டு கோவிலின் அமைப்புகளை சிதம்பரம் சென்று பார்த்து சதாராவில் ஓர் கோயில் நிர்மாணிக்க துவங்கினார்.

சாமண்ணா தனக்கு சொந்தமான சுமார் 24000 சதுர அடி பூமியை தானமாக கோவில் கட்ட கொடுத்து கோவில் கட்டும் பணி துவங்கியது. அந்த இடத்திலேயே பெரியவாள் சில தினங்கள் தங்கி கோவில் கட்டும் பணியை கண்ணன் ஸ்வாமிகள் பொறுப்பேற்று கட்டி முடிக்க

பெரியவாள் உத்திரவு பிறப்பித்தார். கண்ணன் ஸ்வாமிகளும் 4 ஆண்டுகள் தங்கி அவ்வப்போது பெரியவாள் முகாம்களுக்கும் சென்று பணிகள் குறித்து விளக்கங்களை கேட்டு செயலாற்றினார். கோவில் 4 உயரமான கோபுரங்கள் உயரமான மதில் சுவர்கள் தாமிர ஓடுகளால் மூடப்பட்ட சபை பஞ்ஞாஷ்ஷரபடிகள் முதலியவைகள் அமைக்கப்பட்டன. தமிழ்நாடு, ஆந்திரம், கர்நாடகம், கேரளம் போன்ற அரசாங்கங்களை கண்ணன் நேரிடையாக சென்று கோபுரங்களை நிர்மாணிக்கும் பணிகளுக்கு உதவி பெற்று கோயில் திருப்பணி 9.6.1985ல் புதுப்பெரியவாள் முன்னிலையில் சிதம்பரம் திக்ஷ்க்ஷதர்கள் உதவியுடன் கும்பாபிஷேகம் நடைபெற்றது. கோயிலில் நித்திய பூஜை நடைபெறவும் தேவையான டிரஸ்ட் நிதிகளை வசூலிக்க கண்ணன் ஸ்வாமிகள் உதவி செய்தார். இதுபோலவே காசி ஹனுமான் காட்டில் காமகோடிஸ்வரர் கோயிலை பெரியவாள் ஆணைப்படி 1984ல் கண்ணன் ஸ்வாமிகள் கட்டி முடித்தார். இது போலவே ஆமதாபாத்தில் நாட்டிய சாஸ்திரத்திலுள்ள 64 கலைகளைக் குறிக்கும் வகையில் சிற்பங்கள் அடங்கிய ஓர் மண்டபத்தையும் நடனக் கலைஞர் பத்மா சுப்பிரமணியம் உதவியுடன் பெரியவாள் ஆலோசனைப் படி கட்டிமுடிக்கப்பட்டது. பெரியவாள் யாத்திரை திரும்பிவரும் வழியில் காவேரிப்பாக்கம் அருகில் ஓர் சிவன் கோயில் பாழடைந்ததை பெரும் செல்வந்தர்பிர்லா குடும்பத்தார் உதவியுடன் கோயில் கட்டி கும்பாபிஷேகம் செய்யும் பணியையும் முடிக்கப்பட்டது. இது போலவே அமெரிக்காவில் உள்ள நகரத்தார் டாக்டர் ஒருவர் உதவியுடன் நிதி வசூலித்து பெஸன்ட்நகர் கடற்கரையில் ஒரே இடத்தில்ஆறுபடை வீடுகள் அடங்கிய முருகன் கோயில்

கட்டி முடிக்கப்பட்டது. பின்னர் ஸ்வாமிகள் மஹா பெரியவாள் காஞ்சியில் தங்கியிருந்த போது ஓர் நாள் தரிசித்து தனக்கு ஸன்னியாஸம் வழங்க வேண்டும் என பிரார்த்தித்துக்கொண்டார். மஹா பெரியவாள் அவரை காசி சென்று சிறந்த வித்வான்களிடம் அத்வைத வேதாந்தம் கற்கும் படி ஆக்ஞாபித்தார்கள். அதன்படியே அவரும் 2 ஆண்டுகள் காசியில் தங்கி வேதாந்தம் பயின்று மீண்டும் ஸ்ரீமடம் காஞ்சி வந்து மஹாஸ்வாமிகள் ஸித்தி அடைந்த 1994 வரை காஞ்சியிலேயே இருந்தார் பின்பு வயது முதிர்ந்த காரணமாக உடல் நோயினால் பாதிக்கப்பட்டிருந்த போது 16.4.1997 ஆம் ஆண்டு ஸ்ரீராம நவமி தினம் காஞ்சியில் ஸன்யாஸ்ரமம் பெற்று ஸ்ரீதாரகப்ரஹ்மேந்திர ஸரஸ்வதி என்ற பெயருடன் காசி சேஷத்திரம் சென்று தங்கி சில வருடங்கள் கழித்து 1999ல் அந்த சேஷத்திரத்திலேயே ஸித்தி அடைந்தார். ஸ்ரீபெரியவாள் சித்தி அடைந்த பின்பு அவர் ஞாபகார்த்தமாக அவரது ஜெயந்தியன்று சிறப்பாக பூஜைகள் செய்ய நிதி வசூலித்து ஓர் டிரஸ்டையும் நிறுவினார். அதன் படி ஜெயந்தியன்று காஞ்சி காமாக்ஷ்க்ஷியம்மன், வரதராஜர், ஏகாம்பரேசர், மங்கள தீர்த்த ஸ்வாமி கோயில், முருகர் கோயில், திருவிடைமருதூர் மகாலிங்கேஸ்வர் கோயில்களில் சிறப்பு அபிஷேகம், ஸ்ரீமடம் எதிரில் அமைந்துள்ள அனுமார் கோயிலில் வடமாலை மற்றும் அக்கோயில் முழுவதும் அதிக அளவு வாழைப்பழ தார்களினால் அலங்கரித்தல், அம்பாள் தங்கரதம், ஸ்ரீமடத்தில் பிக்ஷாவந்தனம் ஆதி சங்கரர் சஹஸ்ரநாம பூஜை மஹா பெரியவாளின் அதிஷ்டானத்தில் அபிஷேக நித்திய பூஜை சஹஸ்ரநாம பாதுகா பூஜை, மற்றும் அதிஷ்டானத்தில் பூபந்தல் மூலம் அலங்கரிப்பது

ஸ்ரீமடத்தில் பிக்ஷாவந்தன, அன்னதானத்திற்கு பெரிய அளவில் காய்கறிகள் வாங்கி அளித்தல் போன்றவைகள் ஏற்பாடு செய்து நடந்து வந்தது.



கண்ணன் ஸ்வாமிகள்
பெரியவாள்
யாத்திரைகளில்
உடன் செல்வது



## பரம பூஜ்ய ஸ்ரீஸ்வாமிநாதேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்
## (பால சுப்பிரமணியன் என்ற பாலு ஸ்வாமிகள்)



தஞ்சை மன்னார்குடி அருகே உள்ள ராயபுரம் என்ற கிராமம் தான் ஸ்வாமிகள் அவதரித்த ஸ்தலம் இவரது பூர்வாசரம தந்தையின் பெயர் ஸ்ரீ ஆர்.ராஜகோபால் என்பது தாயார் மாது ஸ்ரீ ஆர்.ருக்மணி அம்பாள் என்பதாகும். இவர் 1937ல் பிறந்தார். இவருடன் பிறந்தவர்கள் 7 பேர்கள் அவர்களில் ஸ்ரீ சுப்புராமன் ஸ்ரீவிச்வநாதன் ஸ்ரீசந்தானம் என்கிற மூன்று மூத்த சகோதரர்களும் ஸ்ரீமதி ராதா, ஸ்ரீமதி லக்ஷ்மி, ஸ்ரீ மதி தர்மாம்பாள், ஸ்ரீமதி பட்டம்மாள் என்கிற நான்கு மூத்த சகோதரிகளும் இருந்தனர். இவர் கிராமத்தில் முறைப்படி பள்ளிப் படிப்பில் சேர்ந்து SSLC மற்றும் டைப்பிங் பயிற்சியிலும் தேர்ந்து பின்பு மத்திய அரசாங்கத்தின் சிப்பந்திகள் இன்சூரன்ஸ் கார்பிரேஷன் என்ற நிறுவனத்தில் சென்னையில் பணி புரிந்து வந்தார். இவருக்கு சிறுவயதிலியே ஸ்ரீமஹா பெரியவாளின் பேரில் பக்தி

ஏற்ப்பட்டு அவரை முதன்முதலாக 1942ல் ராயபுரம் கிராமத்தின் ஆசாரியாள் கேம்பில் தரிசிக்கும் பாக்கியம் பெற்றார். இதனிடையே விடுமுறையில் தனக்கு நேரம் கிடைக்கும் போதெல்லாம் ஸ்ரீபெரியவாள் இருக்கும் இடம் சென்று அவரை தரிசிப்பார்.

1954 ஆம் ஆண்டில் மஹா ஸ்வாமிகளுக்கு காஞ்சீபுரம் ஆணை கட்டித் தெரு சங்கர மடத்தில் கனகாபிஷேகம் நடந்த போது அங்கு சென்று அவருடன் இருந்து கைங்கர்யங்களை செய்தார். 1954ல் மஹா பெரியவாள் சென்னை யாத்திரையில் வேதாந்த தேசிக அரங்கத்தில் ஸ்ரீ சேங்காலிபுரம் அனந்தராம திக்ஷ்க்ஷிதர் இராமயண உபன் யாசத்தில் தினமும் பெரியவாளுடன் இருந்து சேவை செய்தார். 1961-62ல் மகா பெரியவாள் இளையாத்தங்குடியில் நீண்ட நாள் தங்கியிருந்த போது அடிக்கடி அங்கு சென்று தரிசித்து தன்னால் முடிந்த கைங்கர்யங்களை செய்து வரலானார். இவரது அலுவலகம் சென்னையில் இருந்ததால் ஸ்ரீ மஹாஸ்வாமிகள் காஞ்சியில் தங்கும் போதெல்லாம் விடுமுறை எடுத்துக் கொண்டு வந்து அவரது ஸ்னானம், பிக்ஷ்கைக்ஷ, பூஜை கைங்கர்யங்களில் ஈடுபடுவார்.

1965 ஆம் ஆண்டிலிருந்து அரசாங்கத்தின் உதவியோடு மாதத்தில் சில நாட்கள் பணி செய்து சிறப்பு விடுமுறை அனுமதியின் பேரில் முழு நேரமும் மஹாஸ்வாமிகளுடன் தங்கி கைங்கர்யங்களில் ஈடுபட்டார். மஹாஸ்வாமிகளின் 1978 முதல் 1984 வரை நீண்ட வட இந்திய யாத்திரையில் அவருடனே கால்நடையாக நடந்து

சென்று அவருக்கு சிறப்பான ஸேவைகளை செய்து வந்தார். காஞ்சி திரும்பிய பின்பும் மஹா ஸ்வாமிகள் 1994 சித்தி அடையும் வரை 5ஸ்ரீ ஆண்டுகள் கைங்கர்யங்கள் அவருக்கு செய்து அவர் பிக்ஷைக்ஷ செய்த பின்பு அதையேதானும் ஆகரமாக உட்கொண்டு இருந்தார். மஹாஸ்வாமிகள் தரிசன ஓய்வுநேரத்தில் அவர் தங்கியுள்ள இடத்தில் தனியாக தனது நித்ய பூஜைகளையும் முடித்துக் கொள்வார். ஓய்வு என்பதே அவருக்கு மிகவும் சொற்ப நேரம் தான். மஹாஸ்வாமிகள் இரவு நேரங்களில் தான் நெடுநேரம் ஸ்ரீமடத்தின் முக்கிய விஷயங்களையும் ஆச்சாரியாளின் முகாம் செய்திகளையும் பொது உலக விஷயங்களையும் அவருடன் விவாதிப்பார். அதனால் இரவு நேரங்களில் உறக்கம் என்பதே மிகவும் அரிது. காலை வேளைகளில் 3 அல்லது 4 மணி அளவில் தான் பெரியவாள் தங்கும் அறை அருகே சற்று ஓய்வு எடுத்துக் கொள்வார். எப்போதும் ஸ்ரீ பெரியவாளை தரிசிக்க நான் விடியற்காலை 3 மணிக்கே என் ஸ்னானங்களை முடித்துக் கொண்டு அவர் இருக்கும் இடம் சங்கர மடமானாலும் தேனம்பாக்கம் அல்லது ஓரிக்கை என்ற இடமாக இருந்தாலும் சைக்கிளில் தினமும் செல்லும் பழக்கம் உடையவன். அப்போதெல்லாம் என்னை பார்த்ததும் பாலு ஸ்வாமிகள் நீ பெரியவாள் தரிசனம் கொடுக்க ஆரம்பித்தால் சிறிது கவனித்துக் கொள் நான் ஓய்வு எடுத்துக் கொள்கிறேன் என்பார். அதுவே எனக்கு பெரியவாளிடம் நெருங்கி நானும் கைங்கர்யம் செய்யும் பாக்கியம் கிடைத்தது. ஸ்ரீ மஹாபெரியவாளும் அந்த நேரம் என்னை அருகே நிற்கச் சொல்லி தரிசத்திற்கு வந்தவர்களையெல்லாம் விசாரித்து அவர்களது குறைகளையும் கேட்டறிந்து அதற்கு பதிலையும்

தெரிவிப்பார். இவைகளை எடுத்துச் சொல்லும் பணி எனக்கு கிட்டியது. இது காலை வேளைகளில் நான்கு மணி முதல் ஆறு மணி வரை தொடரும். அதன் பின்பு ஓய்வு எடுத்துக் கொண்டிருந்த இதர அனுக்க தொண்டர்கள் பெரியவாள் உதவிக்கு அவர் அருகில் வந்து விடுவார்கள். ஸ்ரீ பெரியவாளை தரிசிக்க வரும் பக்தர்கள் குறைகளையெல்லாம் பெரும்பாலும் பாலு ஸ்வாமிகள் தானே பெரியவாளிடம் எடுத்துக் கூறி அதற்குண்டான நிவர்த்திகளையும் பெரியவாள் மூலம் கேட்டு தெரிவிப்பார். ஸ்ரீபெரியவாள் மூலம் ஏழைப் பெண்களுக்கு திருமண உதவி, மருத்துவ உதவி என பல்வேறு உதவிகளை அவர் காலத்தில் ஸ்ரீ பெரியவாளைப் போலவே அவர் செய்துள்ளார். 1992ல் மஹாமஹத்திற்குச் சென்று நான் திரும்பிய பின்பு 10 தினங்கள் உடல்நிலை சரியில்லாது படுத்த படுக்கையாக நோய் வாய்ப்பட்டபோது தரிசனத்திற்கு நான் வராதது கண்டு ஸ்ரீபெரியவாளிடமிருந்து பிரசாதங்களை எடுத்துக் கொண்டு பாலு சுவாமிகளே என்வீடு வந்து எனக்கு அளித்து விசாரித்து விட்டு பெரியவாளிடம் தெரிவித்தது என் ஜென்மாவில் மறக்க முடியாத நிகழ்ச்சியாகும்.

மஹாஸ்வாமிகள் ஸித்தி அடைந்த பின்பு அவர் அதிர்ஷ்டானத்தில் பல நித்திய பூஜா ஸேவைகளையும் சந்திரமௌளீஸ்வரர் பூஜைக்கும் தனது கைங்கரியங்களை செய்தும் கேம்புகளுக்கும் பூஜையுடன் சென்றும் வந்தார். இவர் மடத்தில் ஈடுபடாத கைங்கர்யங்கள் ஏதும் கிடையாது. பெரியவாள் கேம்பு பூஜைகளிலும் சங்கர ஜெயந்தி போன்ற விசேஷ பூஜைகளை இவரே தான் செய்வார். பெரியவாளின்

பரம குரு ஆராதனையை இவரே பல வருடம் முன் நின்று நடத்தினார். கடந்த சில வருடங்களாக வயது முதிர்ந்த காரணமாக உடல் நலம் பாதிக்கப்பட்ட பின்பு காமகோடி பீட மடத்தின் பீடாதிபதியான ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் 1913ஆம் ஆண்டு ஓர் நன்னாளில் த்ரிவேணி சங்கமத்தில் அவருக்கு சன்னியாஸ்ர ஆஸ்ரமம் அளித்து ஸ்ரீஸ்வாமினாதேந்திர ஸரஸ்வதி என்னும் நாமத்துடன் ஸ்ரீமடத்திலேயே தங்கி ஸ்ரீபெரியவாளை தரிசித்து அவர்களுடனேயே சாதுர்மாஸ விரதங்களையும் கலந்து கொண்டு அனுஷ்டித்து வந்தார். உடல்நிலை 1915 முதல் மிகவும் பாதிக்கப்பட்டு உத்திராயண புண்ணிய தினமான தைமாத சுக்லபட்ச ஏகாதசி அன்று தனது 81வது வயதில் ஸித்தி அடைந்து மஹாஸ்வாமிகளின் பாதங்களில் ஒன்றிட கலந்து அவரது அதிஷ்டானமும் காஞ்சி மடத்தின் உபநிஷத் ப்ருஹ்மேந்திர மடத்தில் அமைந்துள்ளது.

காஞ்சி மடத்தின் பூஜைகளையும் பெரியவாளையும் தரிசிக்க வரும் பெரும்பாலான வயதான ஆண் பெண் பக்தர்கள் மடத்திலிருந்து செல்லும் முன் பாலு ஸ்வாமிகளையும் நமஸ்கரித்து தரிசித்து தான் செல்வார்கள். 100 ஆண்டுகள் இப்புவியில் வாழ்ந்து ஒளிவீசி பிரகாசித்துக் கொண்டிருந்த ஸ்ரீமஹா ஸ்வாமிகளுக்கு ஆத்மார்த்தமாக முழு நேர கைங்கர்யம் செய்து ஓர் ப்ருஹ்மஞானியாக ப்ராகாசித்து இருந்தவர் தான் ஸ்வாமினாதேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் ஸ்ரீமடத்தின் சரித்திரத்தில் ஓர் நீங்க இடம் பெற்றுள்ளார்.

பாலு ஸ்வாமிகள் ஸ்ரீ பெரியவாளை தரிசிக்க வந்த முக்கிய பிரமுகர்களுடனும், யாத்திரையிலும்





**பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய**

**ஸ்ரீஸ்ரீஸ்ரீ ஜனார்தனானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகள்**

**(ப்ரம்ஹஸ்ரீ குப்பாலக்ஷ்ம ஸ்ரீ அவதானிஸ்வாமிகள்)**



இவரது பூர்வாஸ்ரம நாமம் ஸாங்க ஸ்வாத்யாய பாஸ்கர ப்ரம்ஹஸ்ரீ குப்பா லக்ஷ்மாவதானி அவர்கள் என்பதாகும்.

ஆந்திர தேசத்தில் ஸதாசாரஸம்பன்னர்கள் ஆனுவம்ஸிக வேதவித்யா விலஸிதர்களில் குப்பா வம்ஸத்தவர்கள் மிகவும் பிரஸித்தி பெற்றவர்கள். வெலநாடி வைதிகர்கள் கௌண்டின்ய கோத்ரம் ஆபஸ்தம்ப ஸூ்த்ரம். க்ருஷ்ண யஜு³ர்வேத³ய தைத்திரீய ஸாகை அவதானிகளவர்களின் தாய் தந்தையர்கள் ப்ரஹ்மஸ்ரீ குப்பா. தக்ஷிணாமூர்த்தி ஸாஸ்த்ரிகள் அன்னபூர்ணம்மா அவர்கள். குண்டூரு ஜில்லா தெனாலி தாலுகா சிவலூரு இவருடைய ஸ்வகிராமம். அவதானி அவர்களின் ஜனனம். ஸ்வஸ்திஸ்ரீ சாந்திரமான ஸௌம்ய நாம ஸம்வத்ஸரம்

ஆஸ்வயுஜ க்ருஷ்ண சப்தமி, புதன்கிழமை (03-11-1909)

இளம் பருவத்திலேயே தந்தையை இழந்த இவர் பூர்வ ஸுக்ருத பரிபாகத்தினால் விஸிஷ்ட விவேகவந்தரை ஸ்வக்ராமமான சிவலூரு, தெனாலி, வஸந்த வாட, அகிரி பள்ளி, ஒங்கோலு, விஜயவாடா, பந்தரு, ஏலூரு முதலிய பல இடங்களில் பல கஷ்டங்களுக்கிடையில் எத்தனையோமஹனீயர்களை சேவித்து க்ருஷ்ண யஜுர்வேதம், ஸம்ஸ்க்ருத, ஆந்திர ஸாஹித்யங்கள், ஸிக்ஷா, வியாகரணம், ஜ்யோதிஷம் நிருக்தம், சந்தஸ்ஸு, கல்பம் எனப்படும் வேதாங்கங்களையும், தர்க்க, வேதாந்த மிமாம்ஸாதி ஸாஸ்திரங்களையும் ஆயுர்வேதம், யோக வித்யா, மந்த்ர ஸாஸ்திரம் முதலிய அத்தனை வித்யைகளையும் கற்றுத் தேர்ந்தார்.

இவருடைய ஆசான்களில் பிரபலமானவர்

1. வேத ஸ்மார்த்த நிபுணர், ஸதாசார நிஷ்டர், வேதைகதபஸ்வி குண்டூர் மண்டல வேதவித்வத் ஸபா பரீஷாதிகாரிகளான ப்ரம்ஹஸ்ரீ குப்பா வேங்கடேஸ்வராவதானிகளாவார்.

2. ஸஹஜ சேமுஷீதுரீனர், அபரதன்வந்தரி என போற்றப்படும் ப்ரஹ்ம ஸ்ரீகுப்பா. ஸங்கர சாஸ்திரிகள் அவதானிகளவர்களின் சொந்த சித்தப்பா ஆவார். இவரின் வைத்ய விதானம் மிகவும் வியத்தகு வண்ணமிருக்கும். நோய்களின் மூல காரணங்கள் அவற்றின் பரிணாம விகாஸ விகாரங்கள் நோயாளியின் பூர்வஜன்ம கர்மானுபந்த விவரங்களுடன் புரிந்து வைத்யம் செய்வதில்

வல்லுனராவார். இவர் யோக தத்வாபிக்ஞரும் ஆவார்.

3. வியாகரண ஸ்தாபக ஸர்வ தந்த்ரஸ்வதந்த்ர ப்ரம்ஹஸ்ரீ குப்பாஸ்ரீ ஆஞ்ஜனேய சாஸ்த்ரி அவர்கள் இவர் அவதானிகளவர்களின் ஸகோதரர் ஆவார். ஸுப்ரஸித்த பஞ்சாங்க கர்த்தா. பஹுக்ரந்த த்ரஷ்டர் வித்வத்கவி. ஸ்ரீ சூர்யராயாந்த்ர நிகண்டு நிர்மித்தவர்களில் ஒருவர். பாரதீய வித்யைகளில் வியாகரணம் அதி விசிஷ்டமானது. சர்வ சாஸ்திரங்களுக்கும் அது முதுகெலும்பு போன்றது. வேதார்த்த விக்ஞானத்திற்கு மிகவும் தேவையானது. அப்பேர்ப்பட்ட வியாகரண சாஸ்திரத்தில் அன்றும் இன்றும் வேறெவரும் பெற்றிராத "வியாகரண ஸ்தாபக" என்ற விருதே இவரின் பெருமையை உணர்த்தும். தன் வாழ்நாளின் கடைசி நாட்களை ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ காஞ்சி பரமாசார்யரின் சன்னதியில் சம்பூர்ண சரணாகதி செய்து ஜீவிதத்தை சரிதார்த்தம் செய்த தன்யஜீவி. ஸ்ரீ பரமாசார்யரவர்கள் வாஞ்சாநாத (குட்டி) கவீஸ்வர விரசிதமான ஆஸிர்வசன ஸதகம் என்கிற பிரௌளத்தை காவியத்திற்கு இவரால் வியாக்யானத்தை செய்வித்தார்.

4. தர்க்க வேதாந்த பாரங்கதர் ப்ரம்ஹஸ்ரீ வேமூரி ராமபிரம்ம சாஸ்திரிகள். ஆந்திரதேசத்தில் அன்றும் இன்றும் உயர்ந்த தர்க்க வேதாந்த வித்வான்கள் இவரின் சிஷ்யர்களாவார்கள்.

5. தர்க்க வேதாந்த ஸார்வபௌம-சாஸ்த்ர ரத்னாகர ப்ரம்மஸ்ரீ மண்டலீக வேங்கட ஸாஸ்த்ரி அவர்கள்.

ஸ்ரீகாஞ்சி பரமாசார்யரின் அபார க்ருபைக்கு பாத்திரமானவர்.

6. உபாஸகாக்ரகண்யர் யோக தத்வக்ஞர், வித்வரின் ப்ரம்ஹஸ்ரீ பாகவதுல அன்னபூர்ணய்ய சாஸ்த்ரி அவர்கள் (தெனாலி) முதலியவர்கள் இப்படிப்பட்ட மஹனீயர்களான குரு புங்கவர்கள் கிடைத்த அதிருஷ்டசாலி.

7. இவர்கள் மட்டுமல்லாமல் மற்றும் எத்தனை ஞானிகள், யோகிகள், தபஸ்விகள், வித்வான்கள் மற்றும் பெரியோர்களை இவர் ஸேவித்தார்.

ஸ்ரீ அவதானிகளவர்களின் ஸாதனையில் பகவான் வைத்த பெரிய பரீக்ஷை அவருடைய கார்ஹஸ்த்யமெனில் அதில் அவருக்கு கிட்டிய பெரிய பரிசு அவருடைய வாழ்க்கைத் துணைவியார் ஆவார். ஸௌபாக்யவதி ஸ்ரீமதி பானுமதம்மா அவர்கள். ஏழை சம்சாரமாக இருந்தாலும் கௌரவ மரியாதைகளில் என்றும் இழுக்கு ஏற்படாதவாறு பந்து மித்ராதிகளுக்கும், அதிதி அப்யாகதர்களுக்கும் நித்யம் அன்ன பானாதிகள் அளித்து ஆதரித்து வந்தார். க்ருஹத்தில் ப்ருத்த மாதா (பரமஸாத்வீ) சின்ன குழந்தைகள் மற்றும் ஆபன்னார்த்திகளாக தஞ்சமடைந்திருக்கும் ஸன்னிஹித போஷ்யவர்கம், பந்து மித்ரர்கள், பாடத்திற்காக வரும் சிறுவர்கள் மற்றும் பெரியோர்கள் சாஸ்திர கோஷ்டி செய்வதற்காக வரும் பெரியோர்கள் சாஸ்திர கோஷ்டி செய்வதற்காக வரும் வித்வான்கள்/ இவர்களால்/ இவைகளால் அவதானிகளவர்களுக்கு எவ்வளவே சங்கடங்கள் இருந்தாலும் கடவுளின் பரீக்ஷையில்

விஜயத்தை சாதிப்பதற்கு அவரது துணைவியார் உதவியால் சாத்தியப்பட்டது.

அவதானிகளவர்களுக்கு கிடைத்த ஸன்மானங்களில் உத்தமோத்தமமானது, ஸர்வ விலக்ஷணமானது, ஸ்ரீ பரமாசார்யர் இவருக்கு அனுக்ரஹித்த துரீயாஸ்ரமம். இவர் ஸதாசார ஸம்பன்னரான வித்வான் அதற்குத் தகுந்த வினய விவேக பக்தி ஞான வைராக்யாதி சத்குண சம்சோபிதர் நிரந்திர ச்ரவண மனனநிதித்யாஸனங்களில் தன் வித்யையும், ஜன்மாவையும் சரிதார்த்தம், ஸார்த்தகம் செய்த ஆதர்ஸ வித்வான்.

பரிபூர்ண ஞான வைராக்ய ஸம்பன்னராக இருந்து கொண்டு வஸிஷ்ட, ஸ்ரீராம ஜனகர்களை போல ஆதர்ஸப்ராயமாக கார்ஹஸ்த்ய தர்மங்களை நிர்வஹித்து வந்தார். இவருக்கு மூன்று ஆண்குழந்தைகள் மற்றும் இரண்டு பெண் குழந்தைகள். நிரந்தர குருதர பஹுவித சாம்சாரிக, ஸாமாஜிக, வைதிகலௌகிக பொறுப்புகளுடன் இருந்தாலும் எப்பொழுதும் சாந்தமாக ப்ரம்ஹாத்ம பாவத்திலேயே மனதை நிறுத்திய தீரர்.

அப்பேர்ப்பட்ட இவர் பீடத்திற்கும், வேத சாஸ்திரங்களுக்கும், சமாஜத்திற்கும் அனேக காலமாக செய்து வரும் சேவைக்கு பரிசாக 1981ல் பரமாசார்யர் தன் திவ்ய ஸாக்ஷாத்ஸன்னிதானத்தில் இவருக்கு ஸர்வ வந்தியம், ஸர்வோத்தமம் ஆன சன்யாஸாரமத்தை அனுக்ரஹித்தார்.

உண்மையில் அதற்கு 30 வருடங்களுக்கு முன்பே ஆசார்யருடனான முதல் சமாவேஸத்திலேயே ஸ்ரீ அவதானிகயவர்கள் சன்யாஸேச்சையை ஸ்வாமிகளிடம் அர்த்தித்தார். ஆனால் இவரால் வேத சாஸ்திரங்களுக்கும் அதன் மூலம் ஸமாஜத்திற்கும் பல சேவைகள் செய்வித்து அவரை பல விதமான பரீக்ஷைகளுக்கு ஆளாக்கி அதன் மூலமாக ஸன்யாஸ ஸ்வீகாரத்திற்கு அன்ஹதை இப்படி இருக்க வேண்டுமென்பதை ஆத்யாத்மிக ஸாதகர்களுக்கு ஸோதாஹரணமாக காட்டிய பிறகே அவருக்கு ஆஸ்ரமத்தை அனுக்ரஹித்தார்.

இவருடைய குரு ஸ்வாமி ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ நாராயாணானந்த ஸரஸ்வதீ ஸ்வாமி அவர்கள் இளம் பிராயத்திலேயே ப்ரம்மசர்யாஸ்ரமத்திலிருந்தே சன்யஸித்த வைராக்ய நிதி, பெரிய வித்வான், ஆனுவம்ஸிக வைத்யர், ஸம்ஸ்க்ருத மஹா ராஷ்ட்ர பாஷைகளில் நல்ல கவி, பாடகர், ஸனாதன தர்ம பிரசாரகர், கர்னாடக மஹாராஷ்ட்ர பிராந்தங்களில் கணக்கில்லாத பக்தர்களுக்கும் ஸாதகர்களுக்கும் ஆத்யாத்மிக மார்க தர்ஸகர். இவருக்கு உகார் ஸ்வாமிகள் என்றும் பெயர் உண்டு. இப்படிப்பட்ட இவர் ஸ்ரீஅவதானிகளவர்களுக்கு சரியான குரு என்றும் இவர் மூலமாக அவருக்கு துரியாஸ்ரம தீக்ஷை தர வேண்டுமென்பது பெரியவாளின் ஆஸயம். பீடாதிபதிகள் தம் உத்தர பீடாதிபதிகளுக்கு தவிர மற்றோருக்கு ஸாக்ஷாத்தாக தீக்ஷை கொடுப்பது லோகாசார விருத்தமாக உள்ளதால் ஆசார்யாள் தாமே ஸ்வயமாக இல்லாமல் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ நாராயண ஸ்வாமிகளின் மூலம் தீக்ஷையை அனுக்ரஹித்தார்.

ஸ்ரீ நாராயண ஸ்வாமிக்கு கூட ஸ்ரீஅவதானிகளவர்கள் மீதும். அவருடைய வ்யகிதித்வம் மீதும் அவருடைய ஸதாசார ஸம்ஸ்காரங்களின் மீதும் அபார கௌரவவாதரங்கள் ஏற்பட்டுள்ளன. ஆதலால் அவர் சந்தோஷ பூர்வமாக அங்கீகரித்தார்.

ஸ்வஸ்தி ஸ்ரீ சாந்திரமான துர்மதி நாம ஸம்வத்ஸரம் வைசாக சுக்ல திரயோதசி ஸ்திரவாஸரம் 16.05.1981 அன்று க்ருஷ்ணாவேணி நதிகளின் சங்கம ஸ்தானம். ஸ்ரீ சிவாஜி மஹாராஜா அவர்களின் ஜன்ம ஸ்தானம் ஆன ஸாதாரா கிராமத்தில் ஸ்ரீ பரமாசார்யர் ஸ்ரீ ஜயேந்திரஸ்வாமி அவர்களின் திவ்ய ஸன்னதியில் ஸ்ரீ அவதானிகளவர்களுக்கு மஹா வாக்யோபதேச பூர்வமாக சன்யாச தீக்ஷையை அனுக்ரஹீக்கபட்டவர் ஆனார்.

ஸ்ரீ நாராயணஸ்வாமிகள் தன்னிடம் அதற்கு முன்னால் எத்தனையோ பேர் இந்த தீக்ஷையை பெற்றிருந்தாலும் ஸ்ரீ அவதானிகளவர்களிடம் தனக்குள்ள விசேஷ ஆதரத்தினால் இந்த சுப சந்தர்ப்பத்தில் அவருக்கு தன் குருவினுடைய தீக்ஷா நாமமானதை இவருக்கு அளித்தது மற்றுமோர் விசேஷம். ஸ்ரீ அவதானிகளவர்களின் தீக்ஷா நாமம் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ ஜனார்தனானந்த ஸரஸ்வதீஸ்வாமி. அது முதல் கடினமான அந்த ஆஸ்ரம தர்ம பரிபாலனங்களை கூட இவர் தன் ஸர்வ விலக்ஷணமாக ஸர்வாதிஸயமான ப்ரத்யேகதையை நிரூபித்தார். ஸ்ரீ பரமசார்யாளைப் போலவே தானும் அபக்வாஸனனனுராகவும் அனிகேதனராகவும் அனேக்தராவாசராகவும் வாகனங்களை விட்டு பாதசாரியை

காசி, காஞ்சீ, காளஹஸ்தீ முதலிய க்ஷேத்ரங்களை தரிசித்தார். பெரியவாளைப் போலவே தானும் வியவஹார, விவேக, ஸமாதி பிராதான்யங்களை கொண்டு ஜீவன்முக்தராய் ஆஸ்ரம ஸ்வீகாரானந்தரம் கூட உலக நன்மையின் பொருட்டும் பல கார்யங்களை கையாண்டார். முன்னமே ஆரம்பித்த வேத சாஸ்திராபிவிருத்தி கார்யகிரமங்கள் தொடர்ந்தார். முன்னேற்றத்தை கொண்டு வந்தார்.

காசியில் பிராம்மண அன்ன ஸத்ரத்தை நிறுவித்தார். அதில் வடக்கத்தி சன்யாசிகளுக்கு கூட பிக்ஷை (அவர்களுக்கு ஹிதமான பூரி, புல்கா, சப்பாத்தி முதலியவைகள்) ஏற்பாடு செய்வதற்கு அவர்களை சென்ற இடமெல்லாம், இருந்த இடமெல்லாம் தர்ம ப்ரஹ்ம தத்துவ ங்களை போதித்துக் கொண்டும் ப்ரஜைகளுக்கு பக்தி, ஞான, வைராக்யங்களை அபிவிருத்தி செய்தார். வயது முதிர்ந்து, தேஹம் சிதிலமாகி, ஆரோக்கியம் குறைந்து இரண்டு கால்களும் அசைக்க முடியாத நிலை வந்த பொழுதும், சிகிச்சைகள் பலனளிக்காத நிலையிலும் கொஞ்சமும் பின்வாங்காத உற்சாகத்தோடும், வயது, ஆரோக்கியம், கஷ்டசுகங்கள் முதலியவை சரிரத்திற்கே ஒழிய தனக்கு இல்லை என்பதை நிரூபித்துக் கொண்டு சிறுபிள்ளையைப் போல கவலையற்று நித்யோத்ஸாஹியை எல்லோரையும் உத்ஸாஹப்படுத்திக் கொண்டும் ஸ்வஸ்திஸ்ரீ சாந்திரமான சித்ரபானு நாம ஸம்வத்ஸரம் வைசாக சுக்ல திவிதீயை மங்களவாஸரம் (14.05.2002) இரவு 9 மணிக்கு அக்ஷய திருதீயை ஆரம்பத்தில் ஸ்ரீசைல மஹாக்ஷேத்ரத்தில் அக்ஷயபதத்தை அடையும் வரையில் நிதாந்த நிரந்தர

நிர்விஷயானந்த நிர்பர நிர்விகல்ய சமாதியிலும் அதற்கு மேல் பக்தர்களின் ஹ்ருதயாந்தரங்களிலும் நிலை பெற்றிருக்கிறார்.

ஸ்ரீ ஜனார்தனானந்த ஸரஸ்வதி ஸ்வாமிகள் மிக்க உயரத்துடன் கம்பீர தோற்றத்துடன் இருப்பார். பிரதி தினமும் காலை 4 மணிக்கெல்லாம் எழுந்து தனது காலைக் கடன்களை முடித்துக் கொண்டு 4.30மணி அளவில் ஸ்ரீ ஏகாம்பரநாதர் குளத்தில் ஸ்நானம் செய்ய மடத்தின் கேட்டை திறந்து கொண்டு வெளிவரும் போது மஹா பெரியவாளின் விஸ்வருபதரிசனத்திற்காக நானும் காலை 3.30 மணிக்கே எழுந்து ஸ்நானம் முடிந்து சைக்களில் மடம் நோக்கி வந்து நுழையும் போது வெளியில் வரும் ஸ்வாமிகளை தினசரி ஸ்ரீமடம் வாசலிலேயே நான் (K.Sசீனுவாசன்) நமஸ்கரிப்பது வழக்கம். ஏகாதசி அன்று ஸ்ரீமடத்தை விட்டு சின்ன காஞ்சிபுரத்திலுள்ள ஸ்ரீவரதராஜ பெருமாளை கால்நடையாகவே சென்று தரிசித்து வருவார்.

சுவாமிகள் ஆஸ்ரமம் பெற்ற பின்பு அங்கிருந்து கிளம்பி பண்டரிபிரம் வந்து நவராத்திரியில் பெரியவாளை தரிசித்து குல்பர்கா மஹாகாவ் போன்ற இடங்களில் பெரியவாளுடன் இருந்து அங்கிருந்து பெரியவாளுடன் கிளம்பும் போது அவதானி ஸ்வாமிகளும் 15.2.2002ல் உடல் நலம் சரியில்லாது மூலம் உபத்திரத்தால் அவதிப்பட்டார். உடனே ஆபிரேஷன் செய்து கொள்ள ஓர் காரில் அவரது பூர்வாஸ்ரம சகோதரர் குப்பா ஆஞ்சினேய சாஸ்திரிகள் மூலம் விஜயவாடா அனுப்பி வைக்கப்பட்டு ஆபிரேஷன் நடந்தது. பின்பு கர்நூலில் நடைபெற உள்ள வியாஸ பூஜையில் பெரியவாளுடன் கலந்து

கால்நடையாகவே ரோடில் நடந்து வரும் போது ஓர் கார் அவரை உராசித்து சென்று காலில் அடிபட்டு நடக்க முடியாது ரோடில் வீழ்ந்து இருப்பதைக் கண்டு கிராமத்தார் அவரை ஓர் வண்டியில் ஏற்றி ஓர் வீட்டில் படுக்க வைத்தனர். இந்த சமாசாரம் அவரது பூர்வாசரம சகோதரர் தக்ஷிணாமூர்த்திக்கு தெரிவித்து அவரும் கர்நூல் சென்று பெரியவாளிடம் தகவல் தெரிவித்தார். பெரியவாளும் உடனே மேட்டூர் ராஜகோபால் ஏகாம்பரத்தை காரில் சென்று அவர் இருக்கும் இடம் கண்டுபிடித்து அழைத்து வரச் செய்தார். அவர்களும் வழி நெடுக பல இடங்களில் விசாரித்து முடிவாக சீவாபூர் என்ற கிராமத்தின் ஓர் வீட்டின் வெளியே கட்டிலில் படுத்திருப்பதை கண்டுபிடித்து மீண்டும் கர்நூல் அவரை அழைத்து வந்து கைபிடித்து பெரியவாளிடம் அழைத்துச் சென்ற போது அவர் இனி பெரியவாளை தரிசிக்க முடியாது போய் விடுமோ என பயந்து இருந்தேன். தரிசித்து விட்டேன். இனி கவலை இல்லை பரம சந்தோஷம் என்றார். பின்பு பெரியவாள் அவரை அங்குள்ள ஓர் அறையில் தங்க ஏற்பாடு செய்து நல்ல டாக்டர் மூலம் வைத்தியம் செய்து கால் குணமாகி பழைய படியே அவர் மீண்டும் நடக்க ஆரம்பித்தார். பலசேக்ஷத்திரங்கள் விஜயம் செய்து தனது தேகம்பலம் குறைந்து வருவதனைக் கருதி ஸ்ரீசைலமஹா க்ஷேத்திரம் சென்று தங்கி அங்கேயே சித்தி அடைந்தார்.

|

தீபாவளி நெருக்கத்தில் ஓர் நாள் மஹா ஸ்வாமிகள் தரிசனத்தின்போது என்னைக் கூப்பிட்டு இரண்டு ஜோடி புதுகாஷாயவஸ்திரங்களை என்னிடம் அளித்து உனக்கு அவதானி சுவாமிகளை தெரியுமா என்று கேட்டு அவர் இப்போது இங்கு இல்லை எங்கு இருக்கிறார் என்பதை

விசாரித்து அவருக்கு தீபாவளி வஸ்திரமாக நான் கொடுத்ததாக கூறி அளித்து விட்டுவா என்றார். நான் மடத்தின் மேனேஜரைக் கேட்ட போது அவர் ஸ்ரீமடத்தின் காளஹஸ்திரி முதியோர் இல்லம் ஓர் அறையில் தங்கி உள்ளார் என்ற தன் பேரில் வஸ்திரங்களை எடுத்துக் கொண்டு நானும் பஸ்ஸில் காளஹஸ்திரி சென்று அவர் தங்கியுள்ள மடத்தின் மேலாளரை சந்தித்த போது அவர் கடைசி பகுதியில் ஓர் அறையில் தங்கி உள்ளதை தெரிவித்தார். நான் சென்றபோது அவர் ஓர் பெஞ்சின் மீது கிழக்கு நோக்கி கண்மூடி த்யானத்தில் இருந்தார். சுமார் 30 நிமிடங்கள் நானும் எதிரே அமர்ந்த போது கண் விழித்து என்னைப் பார்த்து புன்னகையோடு வாய்யா என அழைத்தார். நானும் நமஸ்கரித்து புதுகாஷாயவஸ்திரங்களை அளித்த போது அவர் அதனை தனது சிரஸில் வைத்து மஹா பெரியவாள் உள்ள திக்கு நோக்கி கை கூப்பி நமஸ்கரித்து பின்பு எனது பூர்வாஸ்ரம விபரங்களை கேட்டு மகிழ்ந்து ஓர் பழம் கொடுத்து ஆசிர்வதித்து அனுப்பியது எனக்கு மறக்க முடியாத வாழ்க்கையில் ஓர் நிகழ்ச்சியாகும்.



## (மஹாராஷ்டிராஸ்வாமிகள்)
## (பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய பரம பூஜ்ஜிய ஸ்ரீசங்கரானந்த தீர்த்த ஸ்வாமிகள்)



இவர் மஹாராஷ்டிரா மாநிலத்தைச் சேர்ந்தவர். ஆரம்பகாலத்தில் வடஇந்தியாவில் தேவாஸ் சுதேஸ சமஸ்தானத்தில் வருமான இலாக்காவில் வேலை பார்த்து வந்தார். இவர் மிகவும் கோபசுபாவ குணம் கொண்டவர் அருகே உள்ளவர்களுக்கு அவரைக் கண்டாலே பயம். இவர் வடஇந்தியாவில் சன்னியாஸ்ர ஆஸ்ரமம் பெற்றுக் கொண்டு தேசத்தின் பலக்ஷேத்திரங்களுக்குச் சென்று வந்தார். இந்தி மராத்தி மொழி தான் தெரியும். அவர் ரயிலில் ராமேச்வரம் சென்று திரும்பும் போது அவரது தண்டம் காணாமல்போனது. ஸ்ரீ பெரியவாள் 1929ல் வட ஆற்காடு ஜில்லாவில் யாத்திரை மேற்க் கொண்டு இருந்தபோது இந்த சுவாமிகள் சிதம்பரம் போன்ற க்ஷேத்திரங்களுக்குச் சென்று விட்டு அங்கு அருகில் ஓர் கிராமத்தில் மஹா பெரியவாள் முகாம் இருந்தது அறிந்து மஹா பெரியவாளை தரிசித்தார். தனது தண்டம் காணாது போனது குறித்து பெரியவாளிடம்

தெரிவித்து தனக்கு தண்டம் ஒன்று தந்து உதவும்படி பிரார்த்தித்தார். பெரியவாளும் ஓர் தண்டம் அளித்து அனுக்கிரஹக்கவே அவருக்கு மஹாபெரியவாளின் பேரில் அபரிதமான பக்தி ஏற்பட்டு பெரியவாளையே தனது குருநாதராக பாவித்து ஸ்ரீமடத்திலேயே தனது இறுதி காலம் வரை தங்கி இருந்தார். பெரியவாள் எங்கு கேம்பு சென்றாலும் அவரும் பல்லக்கை தொடர்ந்து நடந்தே வருவார். சிரமமாக உள்ள போது சாலை ஓரம் உள்ள ஊர்களில் தங்கி மீண்டும் கேம்புடன் சேர்ந்து கொள்வார். நாள்தோறும் ஆறு, குளம், கிணறுகளில் தனது ஸ்னானம், அதிஷ்டானங்களை சூரிய உதயம் முன்பு முடித்துக் கொண்டு ஓர் ஏதேனும் பழம், புஷ்பம் சந்தனம் சேகரித்து எடுத்துக் கொண்டு ஸ்ரீ பெரியவாள் இருக்குமிடம் சென்று அவர்பாதங்களுக்கு பாத பூஜை செய்து அவரை பிரதக்ஷ்க்ஷிணத்துடன் கூடிய வந்தனம் செய்து தன் இருப்பிடம் செல்வார். அவர் தனது ஆகாரமாக காய்கறி பால் சப்பாத்தி மட்டுமே எடுத்துக் கொள்வார். தனது ஆகாரத்திற்கு முன்பு முதல் நாள் ஓர் டம்பளரில் சேகரித்து வைத்திருந்த கோமூத்திரத்தையும் அருந்துவார். ஸ்ரீபெரியவாளே அவருக்கு தண்டம் அளித்து அவரது ஆசரம தர்மத்தைக் காப்பாற்றியதால் அவர் பெரியவாளே தன் குருவாக மதித்து பிரியாது இறுதிவரை பெரியவாளுடனே இருந்தவர்.

1929 ஆம் வருடம் சாதுர் மாஸத்தின் போது மலேரியா ஜுரத்தால் 40க்கும் மேலான நாட்கள் உடல்நலம் பாதிக்கப்பட்டபோது பெரியவாள் மஹராஷ்டிராசுவாமிகள் உதவியில் தான் நிற்க நடக்க முடியும் அவரது

ஸ்னானத்திற்கும் அந்த சுவாமிகளே உதவி செய்து உடன் இருந்தார். பிரதி தினமும் பெரியவாளுக்கு பாதபூஜைகளை செய்வித்து வணங்கும் போது அவரது கண்களிலிருந்து கண்ணீர் வடியும்.

1932ல் மஹாஸ்வாமிகள் திருப்பதி தரிசனம் செய்து மலையில் திரும்பி வந்து கொண்டிருக்கும் போது மஹாராஷ்டிராசுவாமிகள் இடையில் மலை ஏறி நடந்து வந்து கொண்டிருந்ததைக் கண்ட கோவிலார் அவரது ஆசரம உறுதியையும் பெரியவாளிடம் அவருக்கு உள்ள பக்தியையும் கருதி அவருக்கு பாலாஜி சிறப்பு தரிசனம் செய்து வைக்க முயன்றனர். ஆனால் அவர் பெரியவாளை விழந்து நமஸ்கரித்து மன்னியுங்கள் இவரே எனக்கு பாலாஜி உங்கள் வேண்டுகோளை ஏற்பதிற்கில்லை என கூறி பாலாஜியை தரிசிக்காது பெரியவாளுடனேதிரும்பி வந்து விட்டார். இறுதி காலம் வரை மஹா பெரியவாளுடனே இருந்து 1954ல் காஞ்சியில் தனது 105வது வயதில் சித்தி அடைந்து அவருக்கு அதிஷ்டானம் சர்வதீர்த்தக் கரையில் அமைத்து பிரதி வருடம் மடத்தின் மேலாளராக இருந்த தேவள்ளா ஜானகிராமய்யர் குடும்பத்தார் நடத்தி வருகின்றனர். பிரதி வருடம் கார்த்திகை மாதம் கிருஷ்ண துவாதசித்வாதசி அன்று ஆராதனை நடக்கின்றது.



## மேட்டூர் ஸ்வாமிகள்
## ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடம் சங்கரமடம்



மேட்டூர் ஸ்வாமிகள் என்று அனைவராலும் அழைக்கப்பட்ட சுவாமிகளின் பூர்வாஸ்ரம பெயர் ஸ்ரீ ராஜகோபால் என்பதாகும். இவர் மாயவரம் சமிபம் சித்தமல்லியில் ரோஹணி நட்சத்திரத்தில் 09.02.1938ல் அவதரித்தார். இவரது பூர்வாஸரமம் தந்தையின் பெயர் கே.ராமச்சந்திர அய்யர் என்றும் தாயார் பெயர் சரஸ்வதி என்பதாகும். இவரது மூத்த சகோதரராக ஆர்.நாராயணன் என்பவரும்(72 வயது) சகோதரி அன்ன பூரணி (4 வயது) யும் இருந்தனர். இவரது பூர்வாச்ரம குடும்பத்தைச் சேர்ந்த அனைவரும் ஸ்ரீமஹா பெரியவாளிடம் தீவிர பக்தியுடன் முடிந்த போதெல்லாம் காஞ்சி வந்து தரிசித்து செல்வார்கள்.

ஸ்வாமிகள் சிறுவயதில் புதுக்கோட்டை பள்ளியில் தனது படிப்பை துவக்கி பின்பு 1960ல் சிதம்பரம் அண்ணாமலை யூனிவர் சிடியில் கெமிக்கல் இன்ஜீனியரிங் பட்டம் பெற்று மேட்டூர் கெமிக்கல் கம்பெனியில் ஓர் உயர்ந்த

பதவியில் சேர்ந்து சுமார் 10 ஆண்டுகள் பணியில் இருந்தார். இவர் மேட்டூரில் உள்ள போதே அங்கு இருந்த சிறந்த வேத பண்டிதரான முல்லைவாசல் ராஜகோபால் கனபாடிகளிடம் முறையாக வேதம் பயின்று யஜுர் வேதத்தில் நல்ல தேர்ச்சி பெற்றார். ஸ்ரீமஹா பெரியவாளிடம் தனது சேவைகளை செய்ய சேர்ந்த காலங்களில் அவரிடமே உபநிஷத் பாஷ்யம் கற்றார்.

இவர் பள்ளியில் படிக்கும் காலங்களில் 1970க்கு முன்பே ஸ்ரீமஹா பெரியவாள் யாத்திரையில் உள்ள இடங்களுக்குச் சென்று அவரை தரிசித்து வந்தார்.

இவரது தூய பக்தியால் ஸ்ரீமஹா பெரியவாளால் ஈர்க்கப்பட்டு இவரும் தனது பதவியை கம்பெனியில் 1970ல் ராஜினாமா செய்து ஸ்ரீமஹா பெரியாவாளுக்கு தன்னால் முடிந்த கைங்கர்யங்களை செய்யும் நோக்கத்தில் காஞ்சி சங்கர மடம் வந்து ஸ்ரீமஹா பெரியவாளுடனேயே தங்கியிருந்தார்.

தன்னை சந்திக்க வருபவர்களிடம் பரமேஸ்வரனின் அவதாரமே ஸ்ரீமஹா பெரியவாள் என்பார். மடத்தின் மாடியில் ஓர் சிறு அறையில் தங்கி தானே சுயம்பாவமாக தனக்கு வேண்டிய சிறு உணவுகளை தயாரித்துக் கொண்டும், வேதம் சாஸ்திர படிப்பு தியானம், பிராணாயாமம், யோகா, சஹஸ்ரகாயித்ரிபாராயணம் கடைபிடித்து வந்தார். இவருக்கு நாளுக்கு நாள் ஞானமும் பக்குவமும் ஏற்பட்டு தீவிர பக்தி ஏற்பட்டு மஹாஸ்வாமிகளுக்கு தன்னால் முடிந்த அனைத்து கைங்கர்யங்களையும் செய்து வந்தார்.

ஸ்ரீமஹா பெரியவாளைப் போலவே இவரும் வாகனங்களில் செல்வதனை தவிர்த்து பாதயாத்திரையாகவே எங்கும் செல்வார். இவர் நேபாளம், நர்மதா பரிக்கிரமா போன்ற அனைத்து இடங்களுக்கும் சென்று வந்தார்.

இவரும் தானும் ஓர் ஸன்னியாசியாக துறவறம் மேற்க்கொள்ள வேண்டும் என விரும்பி மஹாஸ்வாமிகளிடம் அடிக்கடி விண்ணப்பித்துக் கொண்டிருந்தார். இதன் பேரில் ஸ்வாமிகளும் இவரை பற்பல கைங்கர்யங்களில் ஈடுபடுத்தி வந்தார். இவர் பிரதி தினமும் காலை 4 மணி அளவில் தனது காரியங்களை முடித்துக் கொண்டு காஞ்சியிலிருந்த 6 கிலோ மீட்டர் தொலைவிலுள்ள பாலாற்றங்கரைக்கு சைக்களில் சென்று அங்கு மனிதர்கள் நடமாட்டம் இல்லாத இடத்தில் புதியதாக ஓர் நீர் ஊற்று கிணறு தோண்டிவைத்து அதிலிருந்து இரண்டு பெரிய செப்பு குடங்களில் நீரை வடிகட்டி எடுத்துக் கொண்டு ஸ்ரீமடம் வந்து மீண்டும் வடிகட்டி ஸ்ரீபெரியவாளின் ஸ்னானம் அனுஷ்டானம் ஆகியவற்றுக்கு பயன்படுத்த உதவி செய்தார்.

இவர் சன்னியாஸ்ரம ஆஸ்ரமம் பெற்ற பின்பு தினசரி 5 மணி அளவில் காமாக்ஷ்க்ஷி கோவிலுக்குச் சென்று அம்பாள் மூலஸ்தானத்தை ஒட்டிய வெளி பிரகாரத்தில் பல பிரதக்ஷ்க்ஷிணங்களை செய்து ஸ்ரீமடம் திரும்புவார். வேத சாஸ்திரம் சனாதன தர்மநெறிகளின்படி வாழ்ந்து காட்டிய இவர் மஹாஸ்வாமிகள் குறித்தும் பல்வேறு தகவல்களை வெளி உலகிற்கு கொண்டு வந்தார்.

மக்களிடையே சமுதாய வளர்ச்சி இயற்கை நேசம் பசுவளர்ப்பு ஆகியவைகளில் அதிக ஆர்வத்தை ஏற்படுத்தினார். அனைத்தும் பெரியவாள் அருளால் தான் நடக்கின்றது என்பார். ஞானவைராக்கியம் கொண்ட இவர் தன்னை வெளி உலகுக்கு அதிகம் தெரியப்படுத்திக் கொண்டது கிடையாது. மஹாஸ்வாமிகளின் பேரில் தீவிர பக்தி உள்ளவர்கள் மடத்திற்கு வரும் போது அவரைப் போல இவரையும் நமஸ்கரித்து சில நிமிடங்கள் அவருடன் பேசி செல்வார்கள்.

பெரிய அதிகாரிகள், பிற மத தலைவர்கள், மந்திரிகள், ஜனாதிபதி போன்றோர்கள் மஹாஸ்வாமிகளை தரிசிக்க வரும் சமயங்களில் மடத்தில் உள்ளவர்களும் ஸ்வாமியுடன் உள்ளவர்களும் பத்திரிகையாளர்களுடன் போட்டோக்களை எடுத்துக் கொள்வார்கள். ஆனால் மேட்டூர் ஸ்வாமிகள் தான் இருக்கும் இடம்விட்டு . எங்கும் செல்லமாட்டார். அவர்கள் வந்து சென்ற பின்பு யார் யார் வந்தது என்ன சம்பாஷைனை நடந்தது போன்றவைகளை குறித்து எவரிடமும் கேட்டு தெரிந்து கொள்ளவும் மாட்டார். முக்கிய விஷயமாக ஸ்ரீ பெரியவாளே இவரது கருத்தினை கேட்க அழைத்தால்தான் அவரது அறைக்குச் செல்வார்.

1978 ஏப்ரலில் மஹாஸ்வாமிகள் பாதயாத்திரையாக காஞ்சியிலிருந்து புறப்பட்டு ஆந்திரா, கர்நாடகா, மஹாராஷ்டிரா மாநிலங்களின் நூற்றுக்கணக்கான கிராமங்களுக்கு கால்நடையாகவே சென்று அங்குள்ள மக்களை சந்தித்து 1984 ஏப்ரலில் காஞ்சி திரும்பினார். சுவாமிகளுடன் மேட்டூர் சுவாமிகள் உள்பட முக்கிய

சீடர்கள்தான் சென்றனர். காலை 4 மணிக்கு கிளம்பினால் 7 மணி வரை நடந்து பின்பு தங்கும் இடத்தில் ஸ்னானம் ஜபம் பூஜைகளை முடித்துக் கொண்டு பழங்கள் பால் சிறிது ஆகாரமாக எடுத்துக் கொண்டு மீண்டும் பகல் 3 மணி முதல் 6 மணி வரை யாத்திரை தொடரும். மேட்டூர் ஸ்வாமிகள் சைக்களில் அவர்களுடன் நடந்து செல்வதுடன் இரவு வேளைகளில் தங்கும் இடம் காலை மாலை ஸ்னானம், பூஜை இடங்கள் தினமும் 20 மைலுக்கு உட்பட்ட இடங்கள் எளியரோடு வசதி, குறுக்குவழி செல்வார். இதற்காக கிராம வரைபடங்கள் ரோடு போட்ட மேப்புகள் எப்போதும் அவரது கைவசம் இருக்கும். பெரும்பாலும் ஊர்களின் உள்ளே தங்காது வெளியே ரோடுகளுக்கு அருகில் கோவில் மண்டபங்கள், பள்ளிக்கூடங்கள் என ஏற்பாடுகளை செய்வது அந்தெந்த ஊர் பிரமுகர்களை சந்தித்து அவர்களை பெரியவாளிடம் அறிமுகப்படுத்துவார். சில ஊர்களில் சரியான இடங்கள் கிடைக்காத போது மரங்களின் நிழலிலேயே ரிக்ஷாவை நிறுத்தி அதிலேயே ஸ்ரீபெரியவாள் தங்கி சிலமணி நேரம் ஓய்வு எடுத்துக் கொண்டு பயணம் தொடரும். மாலை வேலைகளில் ரோடு வெளிச்சத்திற்கு 2,3 கிரசின் அரிக்கன் லைட்டுகள் தான் எடுத்துச் செல்வார்கள். பெரியவாளுக்கு தேவையான அனைத்து சாமான்களும் மேட்டூர் ஸ்வாமிகள் சைக்களின் பின்புறம் உள்ள காரியரில் இருக்கும்.

வருடத்திற்கு ஒர்முறை குரு பூர்ணிமா பௌர்ணமியில் 2 மாத வியாஸ பூஜை ஒரே இடத்தில் இருந்து நடத்த வேண்டி அதற்கு மட்டும் சம்பந்தப்பட்ட அரசாங்க அதிகாரிகளை சந்தித்து தங்க ஏற்பாடு செய்வார்கள்.

மஹாஸ்வாமிகள் காஞ்சி திரும்பி வந்த பின்பு ஓர் நாள் மேட்டூர் ஸ்வாமிகளை அழைத்து உனக்கு சன்னியாஸ ஆஸ்ரமம் கொடுத்தால் எங்கு தங்குவாய் ஆகார பிக்ஷைக்ஷக்கு என்ன செய்வாய் போன்ற கேள்விகளை கேட்டு பதில் பெற்றபின்பு 1989 மார்ச் மாதத்தில் மேட்டூர் ராஜகோபாலுக்கும் குவளைக்கால் த்யாகு என்பவருக்கும் பெரியவாள் சன்னியாஸ்ரம திக்ஷைக்ஷ அளித்து அனுக்கிரஹித்தார். பின்பு இருவரையும் தினசரி மாலையில் அவரது சன்னதியில் பொதுமக்கள் பார்க்கும் வண்ணம் அமர்ந்து ஸ்ரீலலிதா சஹஸ்ரநாமத்தை உரக்க பாராயணம் செய்ய வேண்டுமென கட்டளையிட்டார்.

மஹாஸ்வாமிகள் ஸித்தி ஆனபின்பு அவரது அதிஷ்டானத்தில் தீபங்கள் பொலிவுடன் இருக்க தீப விளக்குகளுக்கு ஏற்பாடு செய்து தினசரி எந்த நேரமும் நெய்விளக்குகளுக்கு தீபம் பிரகாசத்துடன் இருக்க வேண்டுமென ஏற்பாடுகளை செய்தார். இதற்காக பம்பாய் காமகோடி சபாக்களின் உதவியால் பிரதிவாரமும் 10 கிலோ சுத்தமான வெண்ணையும் பெரியவாளை தினசரி தரிசனம் செய்யும் ஸ்ரீனுவாசன் என்ற பக்தர் மூலம் காஞ்சிக்கு அருகே உள்ள வேடல் என்ற கிராமத்திலிருந்து வரவிழைத்து அவைகளை தானே மாடிக்கு எடுத்துச் சென்று சூரிய ஒளியில் உருக வைத்து தீபங்களுக்கு பயன்படுத்தி வந்தார்.

காஞ்சியிலேயே திருச்சி குப்புசுவாமி அய்யர் என்றும் ஓர் பக்தர் குடும்பத்துடன் வசித்து வந்தார் அவருக்கு காமகோடி மடத்தின் பழைய கால வரலாறுகளும் அநேக ரிகார்டுகளைப் பற்றியும் வேத சாஸ்திர ஞானமும் உண்டு.

அவரும் தினசரி மஹாஸ்வாமிகளை காலை மாலை வேலைகளில் தரிசிப்பார். ஸ்வாமிகளும் அவருடன் அநேக விஷயங்களைப் பற்றி விவாதிப்பார். குப்புசாமி அய்யர் அவர்களும் தினசரி மேட்டூர் ஸ்வாமிகளை சந்தித்து பல மணிநேரம் முக்கிய விஷயங்கள் குறித்து தனது கருத்துக்களை தெரிவித்துச் செல்வார். மஹாஸ்வாமிகள் நூற்றாண்டு விழாக்களின் போது மேட்டூர் ஸ்வாமிகளும், குப்புசுவாமி அய்யரும் இணைந்து மஹாஸ்வாமிகளின் தரிசன அனுபவங்கள் குறித்து பல்வேறு முக்கிய பிரமுகர்களிடம் விபரங்களை பெற்று ஓர் புத்தகம் வெளியிட்டனர். தனது வயது முதிர்ந்த காலத்தில் திரு.குப்புசுவாமி அய்யரும் சன்னியாஸ்ர ஆஸ்ரமம் பெற்று ஸ்ரீமடத்திலேயே தங்கியிருந்து சித்தி அடைந்தார்.

மேட்டூர் ஸ்வாமிகள் ஓர் இன்ஜினியரிங் பட்டதாரி ஆனதால் ஸ்ரீமடத்தின் கட்டிடங்கள் புதுப்பிக்கப் பெற்ற போது காலை வேளைகளில் கட்டிட பணிகளை மேற்பார்வையிட்டு தேவையான மாறுதல்கள் குறித்து மடத்தின் ஏஜெண்டுடன் விவாதிப்பார். மடத்தில் உள்ள கிணறுகள் வற்றி தண்ணீர் பற்றாக்குறை ஏற்பட்ட போது சென்னையிலிருந்த போர் கிணறுகள் தோண்டும் பணியாளர்கள் வந்து வேலை செய்த போது மேட்டூர் சுவாமிகளும் பல இடங்களை தேர்ந்தெடுத்து போர் கிணறுகளை அமைத்த போது ஒவ்வொரு கிணற்றின் தோண்டிய ஆழம் நீர் உள்ள அளவு போன்ற விபரங்களை அங்கேயே கல்வெட்டுகள் மூலம் எழுதிவைக்க ஏற்பாடு செய்த அந்த கிணறுகள் தான் இன்றும் மடத்தின் தண்ணீர் தேவைகளை பூர்த்தி செய்து வருகின்றது.

மஹாஸ்வாமிகள் சித்தி அடைந்து சில மாதங்கள் கழிந்து கால்நடையாகவே காசிக்கு சென்று சங்கரமடத்தில் தங்கி வேதாந்த விசாரம் செய்து மீண்டும் காஞ்சி திரும்பினார். அப்போது ஓரிக்கை கிராமத்தில் மஹாஸ்வாமிகளுக்கு மணிமண்டபம் கட்டும் பணிகள் துவங்கப்பட்டிருந்தது. பெரியவாளின் பக்தர் ஒருவர் அங்கு இவருக்கும் குவளைக்கால் தியாகு ஸ்வாமிகளுக்கும் தங்குவதற்கு வசதிகளுடன் கூடிய அறைகளை கட்டி அதில் சென்று தங்கி இருந்தார்.

மார்ச்சு 2009ல் மீண்டும் கால்நடையாகவே கும்பகோணம் அருகே உள்ள கோவிந்தபுரம் க்ஷேத்திரம் சென்று அங்கு காஞ்சி மடத்தின் முன் ஆச்சாரியாளாக இருந்த போதேந்திராள் அதிஷ்டானம் எதிரே உள்ள ஓர் நந்தவனத்தில் ஒரு சிறுகுடில் அமைத்துக் கொண்டு தங்கியிருந்தார். பெரும்பாலான மஹாபெரியவாளின் பக்தர்கள் அடிக்கடி அங்கு சென்று இவரை தரிசித்து வருவார்கள். தான் இருக்கும் இடத்தைச் சுற்றி ஓர் நந்தவனம் போல் பலவித பூ செடிகளை வைத்து பராமரித்து வந்தார்.

ஸ்ரீகாமகோடி மடத்தில் தற்போது உள்ள பீடாதிபதிகள் தவிர மொத்தத்தில் 68 பீடாதிபதிகள் இருந்துள்ளனர். அவர்களது பெயர் இருந்த காலம் ஸித்தி அடைந்த காலம் போன்றவைகள் ரிகார்டுகளில் புத்தகங்களில் தான் உள்ளது.

மேட்டூர் ஸ்வாமிகள் ஓரிக்கை போல சிறுமணிமண்டபத்தை பெரியவாளுக்கு ஏற்படுத்தி மண்டபத்தின் மூலஸ்தானத்தில் பெரியவாளது சிலையையும் தினசரி பூஜைகள் நடக்க வேண்டியவைகளுக்கும் ஏற்பாடுகளை செய்தார். மண்டபத்தின் உள்ளேயே 68 பீடாதிபிகளுக்கு லிங்கவடிவத்தில் சிலைகளை செய்து அதில் பீடாதிபதிகளின் பெயர், பட்டத்தில் இருந்த காலம், ஸித்தியான காலம் போன்றவைகளை பெயிண்டால் எழுதி வைக்கப்பட்டுள்ளது. மேலும் மண்டபத்தை சுற்றி விநாயகர், குருபகவான், மற்ற இதர தேவதைகளுக்கும் சிறுகோவில்களை நிர்மாணித்துள்ளார். கோயில் மணிமண்டபம் கும்பாபிஷேகம் நடக்கும் முன்பு ஒருவார காலம் முக்கிய ஹோமங்கள் வேதபாராயணங்கள் நாம சங்கீர்த்தனம் போன்றவைகள் நடைபெற்றது. இவைகள் அனைத்தையும் மஹாபெரியவாள் பரம பக்தரான கர்நாடகத்தைச் சேர்ந்த கௌடா என்ற தொழில் அதிபர் சென்னையை சேர்ந்த காமாக்ஷி என்ற மாது மற்றும் பல்வேறு பக்தர்களது பொருள் உதவியாலும் நன்கு நடைபெற்றது.

மஹாஸ்வாமிகளின் ஓர் உன்னதமான சிஷ்யராகவும் ஸன்னியாஸத்திற்கு இலக்கணம் கூறும் வகையில் ஓர் தூய ஸன்னியாஸியாக இருந்து 1913 தீபாவளித் திருநாளில் அனைவரும் கங்கா ஸ்னானம் செய்யும் நாளில் சித்தி அடைந்து பகவான் கிருஷ்ண பரமாத்வின் அம்சமான ஸ்ரீமஹாஸ்வாமிகளின் திருவடிகளில் இணைந்துவிட்டார்.

கோவிந்தபுரம் க்ஷேத்திரத்திற்கு மேலும் மேலும் பெருமை சேர்க்கும் வண்ணம் அவர் தங்கியிருந்த

இடத்திலேயே அதிஷ்டானத்தில் ஸாந்தியத்தம் கொண்டு அனைவருக்கும் அனுக்கிரஹித்து வருகிறார்.

கோவிந்தபுரம் க்ஷேத்திரத்தில் சங்கர மடத்தில் எந்நேரமும் ராமநாமா ஒலிக்கும் போதேந்திராள் ஸன்னிதானமும் எதிரே உள்ள மேட்டூர் ஸ்வாமிகள் அதிஷ்டானமும் காஞ்சி மஹாஸ்வாமிகள் மணிமண்டபமும் இவைகளுக்கு அருகேயே உள்ள நாமசக்கிரவர்த்தி விட்டல்தாஸ் ஸ்வாமிகள் பல கோடியில் நிர்மாணித்துள்ள பாண்டுரங்க மந்திர் மற்றும் மாபெரும் கோசாலைகளும் அனைவரும் பரமசேஷமத்திற்காக கண்டு தரிசிக்க வேண்டிய புண்ணிய பூமியாகும்.

ஸ்ரீ மேட்டூர் ஸ்வாமிகள் இளவயதில்



## பரம பூஜ்ஜிய ஸ்ரீஸதாசிவானந்த தீர்த்த சுவாமிகள்
## (ஸ்ரீ கண்டன் சுவாமிகள்)



இவர் அவதரித்த ஸ்தலம் செட்டி நாட்டை சேர்ந்த காரைக்குடிக்கு அருகிலுள்ள வேலங்குடி என்பதாகும். இவரது தந்தை திருச்சி ஆங்கரை கிராமம் யஜுர் வேத பர்வதம் ப்ரும்மஸ்ரீ A.M.வைத்தியகனபாடிகள் என்பதும் தாயார் திருச்சி வாளாடி கிராமம் சௌமீனாக்ஷிக்ஷி என்கிற சுபலக்ஷ்மி அம்மாள் என்பதும் ஆகும். இவர் 4.4.1937 அன்று அவதரித்தார். இவருக்கு மூத்த சகோதரர் திருச்சி ப்ரும்மஸ்ரீ V.சுப்பிரமண்ணிய சாஸ்திரிகளும் இளைய சகோதரர் V.கோபால கிருஷ்ணனும் ப்ரும்மஸ்ரீ கெங்காதர சிரௌதிகள் பாரியாளான சௌலக்ஷ்மியும் ப்ரும்மஸ்ரீ காஞ்சிபுரம் விஸ்வநாத சாஸ்திரிகளின் பாரியாளான சௌகாமாக்ஷிக்ஷியும் சகோதரிகள் ஆவர்.

இவர் இளம்வயதில் ESLC படித்து ஆயுர்வேத சிரோமணி பட்டமும் பெற்றார்.இவர் 1965 ஆம் ஆண்டு வரை திருச்சி ஆயுர்வேத வைத்தியர் ராகவராவ் என்பவரிடம் உதவியாளராக பணியாற்றியவர். மஹாஸ்வாமிகள்

திருச்சிக்கு முகாம் வரும் போது இவரும் சற்று தொலைவில் இருந்தே தரிசிப்பது வழக்கம். 1957-58ல் ஸ்ரீபெரியவாள் சிலநாள் சென்னையில் ஸர்வமங்களாகலியாண மண்டபத்தில் தங்கியிருந்த போதும் ஸ்ரீகண்டனும் அங்கு சென்று தரிசித்து திருச்சி திரும்பினார்.

இவர் 1966ல் சென்னையில் ஸ்ரீபெரியவாளை முகாமில் சந்தித்து தரிசித்து போது ஸ்ரீபெரியவாளும் இவரது பூர்விக விபரங்களைக் கேட்டு அறிந்தார். இதன் பேரில் இவருக்கு ஸ்ரீபெரியவாள் பேரில் அபரிதமான பக்தி ஏற்பட்டு அவருடனேயே தங்கி ஏதேனும் கைங்கர்யம் செய்ய வேண்டும் என அவா தோன்றியது. இதை ஸ்ரீபெரியவாளளிடம் ப்ரார்த்தித்த போது அவரும் சம்மதித்து 1966 மார்ச்சு மாத இறுதி வாரம் முதற்கொண்டு பெரியவாளின் பல்வேறு கைங்கர்யங்களில் ஈடுபட்டு சிறிது காலம் சென்றதும் அவரது முக்கியமான பிக்ஷை கைங்கர்யங்களில் ஈடுபட்டு இறுதிகாலம் வரை அக்கைங்கர்யத்திலேயே இருந்தார். தனது இறுதிகாலம் வரை திருமணம் செய்து கொள்ளாத ப்ரம்மச்சாரியாகவே இருந்தார். இவருக்கு ஆயுர்வேத திறமை உண்டானதால் அவ்வப்போது பெரியவாளுக்கு ஏற்படும் சிறுஉடல் உபாதைகளுக்கு பல்வேறு வகை மூலிகை செடிகளை வரவிழைத்து லேகியம், கஷாயம் போன்று ஸ்ரீபெரியவாளுக்கு கொடுத்து உதவுவார்.

ஸ்ரீபெரியவாள் ஆற்காடு காட்ராம்பாளைம் என்ற ஊரில் முகாம் இருந்த போது ஓர் நாள் மாலை 6 மணி அளவில் பெரியவாள் தனது அனுஷ்டானங்களை முடித்துக்

கொண்டு கண்களை மூடி த்யானத்தில் இருந்த போது அவர் அமர்ந்த கரும்பலகை ஒரமாக சில கருந்தேள்கள் ஊர்ந்து சென்று கொண்டிருந்தது அப்போது அருகில் நின்று கொண்டிருந்த ஓர் அனுக்க தொண்டர் பயந்து உடனே ஸ்ரீகண்டனிடம் தெரிவித்து ஓர் கொம்பால் தான் அவைகளை அடித்து தள்ளிவிடட்டுமா எனக் கேட்டார். ஸ்ரீகண்டன் அதெல்லாம் வேண்டாம் பெரியவாளை அவைகள் ஒன்றும் செய்யாது அவர் சர்வேஸ்வரன் அவரைக் கொட்டினாலும் அவருக்கு கடுக்காது வலியும் ஏற்படாது என்றார். சில நிமிடங்களில் த்யானம் முடிந்து பெரியவாள் மக்களுக்கு தரிசனம் அளிக்க எழுந்து செல்லும் போது அங்கிருந்த தொண்டரிடம் தேள்கள் எல்லாம் ஓடிப்போய் விட்டது. அவை என்னைக் கொட்டவில்லை என சர்வசாதாரணமாக சொல்லி சிரித்துக் கொண்டே சென்றார். எப்போதும் ஸ்ரீபெரியவாள் மனம் அறிந்து நடப்பவர்தான் ஸ்ரீகண்டன் சுவாமிகள். அவர் எங்கு சென்றாலும் அவருடனேயே கால்நடையாகவே செல்வார்.

இது போலவே ஓர்முறை கும்பகோணம் அருகே உள்ள ஓர் கிராமத்தில் பெரியவாள் பூஜையுடன் முகாம் இட்டு இருந்தார். அக்கிராமம் மிக பழைமையானது பெரும்பாலான வீடுகள் கழிகள் எல்லாம் மூங்கிலால் வேயப்பட்டு ஓடுகளுடன் இருந்தது. ஓர் நாள் மாலையில் ஸ்ரீகண்டன் சுவாமிகள் பிக்ஷைக்கு நேரம் நிறைய உள்ளது என ஓர் அறையில் சுவற்றில் சாய்ந்து ஓய்வு எடுத்தபடி உட்கார்ந்து இருந்தார். அந்த நேரம் ஸ்ரீபெரியவாளும் மாலை தனது அதிஷ்டானங்களை முடித்துக் கொண்டு த்யானம் செய்தபடி இருந்து கண்

திறந்து தனது பக்கத்திலிருந்த தொண்டரை கைதட்டி வரவிழைத்து சீக்கிரம் ஸ்ரீகண்டனை இங்கு ஓடி வரச்சொல் என்றார். அவரும் வேகமாக வெளியே ஓடி கூக்கிரலிட்டபடி பெரியவாளின் செய்தியை ஸ்ரீகண்டனிடம் தெரிவிக்க அவரும் என்னவோ ஏதோ தர்மசங்கடம் என நினைத்து பெரியவாளை நோக்கி ஓடி வந்தார். அவர் அந்த அறையை விட்டு வெளி வந்த நேரம் ஓர் சத்தத்துடன் அந்த அறையின் மேற்கூரை இடிந்து வீழ்ந்தது. ஸ்ரீகண்டன் சுவாமிகளும் ஸ்ரீ பெரியவாள் தான் என்னைக் காப்பாற்றினார் என நா தழக்க கண்ணீர் மல்க கூறி பெரியவாளை வந்தனம் செய்து நமஸ்கரித்தது மறக்க முடியாத நிகழ்ச்சியாகும்.

மஹாஸ்வாமிகள் சித்தி அடைந்த பின்பு இவர் ஸ்ரீமடத்தில் பூஜை உள்ள காலங்களில் பூஜை மண்டபம் சென்று பூஜை பாராயணங்களில் கலந்து கொண்டும் மிகுதி நேரங்களில் அதிஷ்டான கைங்கர்யங்களிலும் ஈடுபடுவார். முக்கியமாக அதிஷ்டான தீபாராதனை நேரங்களில் காலை மாலை இரு வேளைகளிலும் இவரே புதுப்பெரியவாளின் அறைக்குச் சென்று தீபாராதனைக்கு தயாராசி உள்ளது என தெரிவித்து அவரை அழைத்து வந்து தீபாராதனையையும் முடிக்க உதவுவார்.

இவருக்கு வயோதிகத்தினால் பல்வேறு உடல் உபாதை தோன்றியவுடன் ஸ்ரீபுதுப்பெரியவாள் இவருக்கு சன்நியாஸ ஆஸ்ரமம் அளிக்க முடிவு செய்து பிப்ரவரி 24ஆம் நாள் 2002 ஆம் வருடம் காஞ்சிபுரம் காமாக்ஷிக்ஷியம்பாள் திருக்குளக்கரையில் இவருக்கு

ஆஸ்ரமம் வழங்கி ஸ்ரீஸதா சிவானந்த தீர்த்தஸ்வாமிகள் என்ற திக்ஷ்க்ஷநாமம் வழங்கப்பட்டது. இவருக்கு தம்புடு ஸ்வாமிகள் என அழைக்கப்பட்ட பூஜ்ஜிய ஸ்ரீகுவலாயனந்த தீர்த்த சுவாமிகளே குருவாக இருந்து ஆஸ்ரமம் வழங்கியவர் இவர் சிறிது காலம் காஞ்சி சங்கர மடத்திலேயே தங்கி இருந்து பின்பு திருச்சி திருவானைக் கோயிலில் சென்று தங்கியிருந்த போது மே மாதம் 11ஆம் தேதி 2003 அன்று சித்தி அடைந்து ஆங்கிரை கிராமம் கோவிந்த ராஜபுரம் காயத்ரி நதிக்கரை அருகே இவருக்கு அதிஷ்டானம் அமைக்கப்பட்டு பூஜைகளும் ஆராதனைகளும் நடைபெறுகின்றது. சித்திரை மாத சுக்லபக்ஷி தசமியில் ஸ்ரார்தமும் மறுநாள் ஆராதனையும் நடைபெறுகின்றன.

ஸ்ரீ கண்டன் மற்றும் பாலு சன்னியாஸ்ரம ஆஸ்ரமம் பெறும் முன் மஹாஸ்வாமிகளின் முகாம்களில் கலந்துகொண்ட நிழற்படங்கள்



## பூஜ்ய ஸ்ரீ பிரகநானேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் (திரு. K. குப்புசுவாமி அய்யர் ஸ்வாமிகள்)



இவர் 1911 செப்டம்பர் 28ஆம் தேதி கும்பகோணத்தில் மடம் தெரு என அழைக்கப்பட்ட தற்போதைய டபிர் தெருவில் அப்பய்ய அய்யர் மாது நாகலஷ்மி அம்மாளுக்கு புத்திரனாக அவதரித்து ஏகபுத்திரனாகவே இருந்து வந்தார்.

கும்பகோணத்தில் 1916ஆம் ஆண்டு நவராத்ரி பூஜையின் போது மகாஸ்வாமிகள் கேம்பில் இருந்த போது நவராத்ரி 5ஆம் நாள் இவருக்கு 6ஆம் வயது பிறந்தநாளை முன்னிட்டு தன் தாயாருடன் முதன்முதலாக பெரியவாளை தரிசித்து ஆசி பெற்றார். தனது 8 வயதிலேயே இவர் தன் தாய்தந்தை இருவரையும் இழந்தார். பின்பு இவர் தன் தாயார் அம்மாவுடனும் மாமாவுடனும் தங்களது குடும்பத்திற்கு சொந்தமான வீடு திருவிடை மருதூரில் வந்து தங்கி தன் படிப்புகளை மேற்க் கொண்டார். அங்கு உள்ள ஆரம்ப பள்ளியில் படித்து கும்பகோணம் கல்லூரியில் இன்டர்மீடியட் தேர்ச்சி பெற்று சென்னை லயோ கல்லூரியில் B.A பட்டம் பெற்றார் இவர் சென்னையில் படித்த காலங்களில் மஹாசுவாமிகள்

சென்னையின் பல இடங்களிலும் சித்தூர் புக்கையிலும் கேம்பில் சென்று அடிக்கடி தரிசித்து வந்தார்.

இவரது பட்டப்படிப்பு முடிந்த பின்பு ஹாஸ்பெட் சென்று துங்கபத்ரா அணைக்கட்டு திட்டத்தின் தணிக்கைப் பிரிவில் சேர்ந்து பணி புரிந்தார். ஆனால் அங்கு உள்ள சீதோஷ்ண நிலையும் உணவும் இவரது உடல்நலத்திற்கு ஒப்புகொள்ளாது 4 மாத காலத்திலேயே தனது வேலையை ராஜினாமா செய்து 1932 திருவிடை மருதூர் திரும்பினார்.

அதிர்ஷடவசமாக மஹாபெரியவாளும் பூஜையுடன் வந்து டிசம்பர் 1932 முதல் ஜீன் 1933 வரை திருவிடை மருதூரில் தங்கி இருந்தார். அங்கு சங்கர ஜெயந்தி உற்சவம் நன்கு நடைபெற்றது. குப்புசுவாமி அய்யர் துடிப்பான பல இளைஞர்களுடன் சேர்ந்து சங்கர ஜெயந்தியில் உற்சாகமாக ஈடுபட்டு உற்சவத்தை சிறப்பித்தார். இதனை கவனித்த மஹா ஸ்வாமிகள் இவரை அழைத்து தன் முகாம்களில் இனிவந்து முடிந்த கைங்கர்யங்களில் ஈடுபட அழைப்பு விடுத்தார். இது தான் இவரது வாழ்க்கையின் முதல் திருப்ப நிகழ்ச்சியாகும்.

மஹா ஸ்வாமிகளின் முதல் காசி யாத்திரையில் அவருடன் சென்று அவருக்கு விசேஷ காரியதரிசியாக செயல்பட்டு மடத்தின் கடித போக்குவரத்துக்களை கவனிப்பது, பொது விவகாரங்களில் ஈடுபடுவது மேலும் அவர் இடும் பணிகளை கவனித்து ஈடுபட்டு பணியாற்றினார். தொடர்ந்து 12 வருடங்கள் முகாமில் பணிபுரிந்து பின்பு திருச்சியிலுள்ள உயர்நிலை பள்ளியில் ஆசிரியராக பணிபுரிந்து 1972ல் ஓய்வும் பெற்றார். பணியில் உள்ள போதும் தனக்கு நேரம் கிடைக்கும் போதெல்லாம் கேம்புகளுக்குச் சென்று பெரியவாளை தரிசித்து தன்னால் முடிந்த கைங்கர்யங்களை செய்து வந்தார். பல முக்கிய பணிகளை கவனிக்க தேவையான போதெல்லாம் பெரியவாளும் இவருக்கு தகவல் அனுப்பி வரவிழைத்து பணிகளை ஒப்படைத்து அவைகளை திறம்பட செய்து முடிப்பார்.

பின்பு இவரது வயது முதிர்ச்சி கண்டு மஹாபெரியவாள் இவரை காஞ்சி சென்று ஓர் வீட்டில் தங்கி இருக்க பணித்தார். இவரும் தனது துணைவியாருடன் ஸ்ரீமடத்தின் அருகே ஓர் வீட்டில் தங்கி பெரியவாள் காஞ்சியில் உள்ள காலங்களில் அவரை தினமும் தரிசித்து வந்தார். ஸ்ரீபெரியவாள் 1968 முதல் ஆந்திரம், கர்நாடகம், மஹாராஷ்டிரா மாநிலங்களில் பல்வேறு இடங்களுக்கு கால்நடையாக சென்ற போது இவரும் சதாரா பண்டர்பூர் மஹாகான் கர்நூல் போன்ற இடங்களுக்குச் சென்று மஹாபெரியவாளை தரிசித்தார். இவர் மஹா ஸ்வாமிகளின் வேண்டுகோளின்படி ஏராளமான புத்தகங்களை தயாரித்து வெளியிட்டுள்ளார். இவற்றுள் முக்கியமாக பகவத்பாதாள் ஆச்சாரியாளைப் பற்றி அடங்கும். ஆதிசங்கரரைப் பற்றிய ஓர் ஆராய்ச்சி புத்தகம், பகவத் கீதை சராம்சங்கள் கூடிய சங்கரர், ராமனுஜர், மாதவர், ஸ்ரீதரர், ராகவேந்திரர் ஆகியவர்கள் வரலாறு அடங்கிய முக்கிய நூல்களும் உண்டு. இவர் முக்கியமாக சங்கர பகவத்பாதாள் விபரங்கள் அடங்கிய 60 கட்டுரைகளை தயாரித்து இந்தியன் எக்ஸ்பிரஸ் ஆங்கில நாளேட்டில் வெளியிட்டுள்ளார். மேலும் ஆதிசங்கரரின் சரித்திர பூர்வமான செய்திகள் காஞ்சி காமகோடி பீடம், ஆதிசங்கரர் இருந்தகால வரலாறு சமஸ்கிருத காவியங்களுடன் கூடிய விஞ்ஞான பூர்வமாக செய்தி திரட்டுகள், முன்னாள் இந்துமத அரசர்கள், கவிகள், கதாசிரியர்கள் குறிப்புகள் தொடுத்த அரிய புத்தகங்களையும் வெளியிட்டுள்ளார். சௌந்தர்யலஹரியின் பத்துவிளக்க உரை விமர்சனங்கள், காஞ்சி மடத்துடன் இதர மடங்களுக்கு உள்ள தொடர்புகள், ஜோதிடசாஸ்திரத்தின் துவக்க பரிமாணங்கள் அடங்கிய புத்தகம், தென்னகத்தில் சிறந்து பிரகாசித்து வாழ்ந்த மகாமகோத்பாய பண்டிதர்களின் வரலாறுகள் மஹா ஸ்வாமிகளைப் பற்றிய வரலாறு, மஹா ஸ்வாமிகள் பட்டத்தில் இருந்த போது அவருக்கு திருத்தொண்டு செய்தவர்கள் வரலாறு புத்தகங்களும் தயாரித்துள்ளார்.

காஞ்சி சேக்ஷத்திரத்தின் திராவிட இனமக்களின் நாகரிகம் நூறு ஆண்டுகள் வாழ்ந்த மகான்களைப் பற்றி மூன்று வால்யூம்களில் நூல்களை தயாரித்து வெளியிட்டுள்ளார். மடத்தின் முக்கிய குறிப்புகள் அடங்கிய புராதன கல்வெட்டுகள் தாமிர பிளேட்டின் காணப்பட்ட முக்கிய குறிப்புகளை தயாரித்து நூல் வடிவமாக வெளியிட்டுள்ளார்.

மஹா ஸ்வாமிகள் தஞ்சை மன்னர்களில் முதுமையான மன்னருக்கு நிறுத்தம் செய்யப்பட்ட ஓய்வு ஊதியம் பெற்று தரும் நடவடிக்கையில் இவரை ஈடுபடுத்தினார். இவர் மேலும் பல இடங்களுக்கு விஜயம் செய்து சாஸ்திர சம்மந்தமான விதிமுறைகள் வர்ணாசிரமத்தில் கடைபிடிக்க வேண்டிய நியமங்கள் குறித்து பிரசார கூட்டங்களை கூட்டிவித்து நடத்தினார் இவர் பல ஸ்தாபனங்களுடன் தொடர்புகொண்டு பணி புரிந்துள்ளார். சமஸ்கிருத கல்வி ஸொஸைடியின் உதவி செயலராக 5 ஆண்டுகள் பணி புரிந்து சமஸ்கிருத ஸ்ரீ என்ற மாதாந்திர இதழை வெளிவர உதவி புரிந்தார். ஜடபாராயண டிரஸ்டில் மேனேஜிங் டிரஸ்டியாக செயல்பட்டு பிரதி வருடம் காமாக்ஷ்க்ஷியம்பாள் பிரம்மோ உற்சவத்தில் கோவிலிலும் ஸ்ரீமடத்திலும் ஜடபாராயணங்களை 10 தினங்கள் நடக்க ஏற்பாடு செய்து அவர்களுக்கு தனது இல்லத்திலேயே வைதிக சமையல் கலைஞர்கள் மூலம் உணவு ஏற்பாடு செய்து வழங்கினார். மஹா ஸ்வாமிகள் உத்திரவு படி ஸ்ரீமடத்திலுள்ள ஆதிசங்கரர் வினாயகர் சன்னதிகளில் நிரந்திரமாக எப்போதும் தீபம் ஒளிர்விட்டு பிரகாசிக்க நெய்தீபம் டிரஸ்டு 9 பேர்கள் அடங்கிய டிரஸ்டு ஏற்படுத்தி செயல்பட்டார்.

பம்பாய் காமாக்ஷ்க்ஷிஸேவாசமதியின் டிரஸ்டியாக இருந்து பல்வேறு கைங்கர்யங்களில் ஈடுபட்டார். திருச்சியிலிருந்து செயல்பட்டு வந்த சமஸ்கிருத சாஹித்திய பரிக்ஷ்க்ஷித்தில் 35 ஆண்டுகள் செயலாளராக இருந்துள்ளார். மஹா ஸ்வாமிகளின் முக்கிய திட்டமான முத்ராதிகாரிகளுக்கு தலைமை பொறுப்பில் இருந்து

செயலாற்றினார். நான்குநிலை கோபுரங்கள் உள்ள கோயில்களில் நடைபெறும் வேத பாராயணத்தை ஒருங்கிணைத்து நடைபெறச் செய்தார். காவேரி நதி பாயும் தஞ்சை போன்ற ஜில்லாக்களில் தொடர்ந்து மழையின்றி வறட்சி ஏற்பட்டு விவசாயம் பாதிக்கப்பட்டபோது பலர் தங்களது விளைநிலங்களை விற்க துவங்கி பெரியவாளை தரிசித்து தங்களது ஆதங்கங்களை தெரிவித்து வருந்தினர். பெரியவாள் இது தெய்வ குற்றம் தான். அந்த காலங்களில் மன்னர்கள் கங்கை கொண்ட சோழபுரம் சுவாமிக்கு ஐப்பசி பௌர்ணமியில் பெரிய அளவில் அன்னாபிஷேகம் உற்சவம் செய்து வந்தது என்னகாரணத்தாலோ தடைபெற்று நின்றுவிட்டது. அதனை மீண்டும் நடத்த முயற்சி செய்யுங்கள் என்றார். அந்த கோவில் சுவாமியின் லிங்கமும், ஆவடையாரும் பிரம்மாண்டமாக 20 அடி உயரத்திற்கு மேற்பட்டது. அதற்கு அன்னம் தயாரித்து அபிஷேகம் செய்ய நூற்றுக்கணக்கான அரிசி மூட்டைகளும், சமைப்பவர்களும், அன்னம் சாமிக்கு சாற்ற நூற்றுக்கு மேற்பட்டவர்கள் தேவை. இப்பணியை பெரியவாள் திரு.குப்புசாமி அய்யரிடம் ஒப்படைக்க அவர் கும்பகோணம் அதன் சுற்றி ஊர்களிலுள்ள பல பிரமுகர்களைக் கொண்டு ஓர் டிரஸ்ட் அமைத்து 1985ஆம் ஆண்டிலிருந்து பலபக்தர்களிடமிருந்து நூற்றுக்கணக்கான அரிசி மூட்டைகள் நன்கொடையாக பெறப்பட்டு பல சமையல் கலைஞர்கள் உதவியாலும் நூற்றுக்கணக்கான சிவாசாரியார்கள் உதவியாலும் சுவாமியின் அன்னாபிஷேகம் கோலாகலமாக நடைபெறுகிறது. அன்னாபிஷேகம் முடிந்த மறுதினம் அவைகளே தயிர் சாதமாக தயாரிக்கப்பட்டு மக்களுக்கு வழங்கப்படுகிறது. 1985 ஆம் ஆண்டு முதல்வருட அன்னாபிஷேக பூஜைகளை திரு.குப்புசுவாமி அய்யர் அவர்களுடன் நானும் நேரில் சென்று கண்டு தரிசிக்கும் பாக்கியம் கிடைத்தது.

மஹா ஸ்வாமிகளை தினசரி தரிசிக்க வரும் நேரங்களில் நான் இருப்பதால் நானும் அவருடன் நெருங்கி பழக வாய்ப்பு கிடைத்தது(K.S.சீனுவாசன்) அவர் தயாரிக்கும் ஆங்கில கட்டுரைகளை எனது நண்பர் கணபதி

என்ற நண்பர் ஸ்ரீமடத்திலுள்ள டைப்மெஷினில் தினசரி தட்டெச்சு செய்து தருவார். நெய் தீபத்திற்கு தேவையான நெய் குறைந்த விலையில் காஞ்சி அருகே உள்ள கிராமங்களுக்கு சென்று மொத்தமாக அவ்வப்போது வாங்கி அளிக்கும் பணியில் ஈடுபடுவேன். காஞ்சியின் எல்லை பண்டை காலங்களில் 25 கி.மீ.அளவு நான்கு புறமும் இருந்துள்ளது. ஆதிசங்கரர் தனது இறுதி காலத்தில் காஞ்சி சேக்ஷத்திரத்தில் இருந்ததால் அவரைப் பற்றிய கல்வெட்டுகள் காஞ்சியின் எல்லை கோயில்களிலும் வயல்வெளிகளிலும் இருந்துள்ளது. அவைகளை கண்டறிய மஹா பெரியவாள் தொல்பொருள் இலாக்கா அதிகாரி திரு.நாகசுவாமியை பார்க்க சொல்லி அவருக்கு உதவியாக நானும் சில இடங்களுக்கு சென்று வர நேர்ந்தது.

அதுபோலவே திரு.குப்புசுவாமி அய்யர் அவர்களும் நானும் சில கிராமங்களுக்குச் சென்று கல்வெட்டுகளை பார்த்து அதன் பிரதிகளை சேகரித்துக் கொண்டு வந்து மஹா ஸ்வாமிகளிடம் அளித்தோம். காஞ்சி அருகே உள்ள தாங்கி, பரந்தூர், காரை, சங்கராபுரம், பொன்விளைந்த களத்தூர் போன்ற இடங்களுக்குச் சென்றதன் மூலம் நானும் ஸ்ரீகுப்புசுவாமி அய்யர் உடன் அதிகம் பழகும் வாய்ப்பு கிடைத்தது.

மஹா ஸ்வாமிகள் தனது 87 ஆண்டுகள் காமகோடி பீடத்தின் பரிபாலனத்தில் ஒளிர்விட்டு பிரகாசித்து இருந்த போது அவரால் நடைபெற்ற அனைத்து சனாதனதர்ம நிகழ்ச்சிகள் அனைத்திலும்குப்புசுவாமி அய்யர் அவர்களும் 70 ஆண்டுகள் ஈடுபட்டு கண்டுகளித்தவராவார். இவர் தனது இறுதி காலம் வரை மிக்க சுறுசுறுப்புடன் மடத்தின் பல முக்கிய பணிகளில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு தனது வாழ்க்கையை அர்பணித்தார். மடத்திற்கு தேவையான பல்வேறு விஷயங்கள் குறித்து தேவைப்படுவைகளை தொகுத்துக் கொடுத்து ஆச்சாரியார்களுக்கு வழங்குவார். மடத்தின் ஓர் முக்கிய கர்தாவாக இருந்து மஹா பெரியவாள் மற்றும் உள்ள

இரு ஆச்சாரியாள்களின் பரிபூர்ண நம்பிக்கைக்கு உகந்து அவர்களது பேரனுக்கிரஹத்துடன் இருந்துள்ளார். மஹா ஸ்வாமிகளின் நூற்றாண்டு நிகழ்ச்சிகளின் போது பல தரப்பட்ட மக்களது தரிசன அனுபவங்களை ஸ்ரீகுப்புசுவாமி அய்யர் ஸ்ரீமேட்டூர் சுவாமிகளுடன் இணைந்து தயாரித்து ஓர் அரும்பெரும் புத்தகமாக வெளியிட்டார்.

திரு.குப்புசுவாமி அவர்கள் 6.6.2002ல் உடல்நலம் சரியில்லாத தனது துணைவியாரை இழந்த அவருக்கும் வயது முதிர்வு காரணமாக அடிக்கடி உடல்நிலை பாதிப்பு ஏற்பட்டது. இதனால் காமகோடி மடத்தின் பீடாதிபதியான ஸ்ரீஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் 16.10.2002ல் அவருக்கு மஹாவாக்கிய உபதேசம் செய்து சன்னியாஸ்ரம திக்ஷைக்ஷ அளித்து பிரகநானேந்திர சரஸ்வதி என்ற திக்ஷைக்ஷ நாமம் அளித்து ஸ்ரீமடத்தின் உள்ளே அதிஷ்டானம் அருகே ஓர் அறையில் தங்கி இருந்தார்.

25.11.2002 கிருத்திகை ஸோமவார நன்னாளில் ஸ்ரீபாலபெரியவர் தனது சந்திர மௌளீஸ்வரர் 3 கால பூஜைகளை முடித்துக் கொண்டு மஹா ஸ்வாமிகள் அதிஷ்டான தீபாரதனை பிற்பகல் 3 மணி அளவில் நடத்தும் போது பிரகநானேந்திர சரஸ்வதி சுவாமிகளும் தன் அறையிலேயே சித்தி அடைந்தார். இவருக்கு உபநிஷத் மடத்திலேயே அடக்கம் செய்து அதிஷ்டானம் அமைக்கப்பட்டு அனைத்து சடங்குகளும் அன்றே செய்யப்பட்டு 6.12.2002ல் ஆராதனையும் நடத்தப்பட்டது.

பெரியவாள் உத்திரவுபடி ஆதி சங்கரரின் பல்வேறு உபதேசங்களையும் செயல்களையும் பல தரப்பட்ட மொழிகளில் தயாரித்து தனது இறுதி மலர் மாலையாக ஸ்ரீபுதுப்பெரியவாள் சொர்ணாபிஷேகத்தின் போது வெளியிட்டு மகிழ்ந்தார்.

ஸ்வாமிகள் பெரியவர்கள் அனைவருக்கும் தான் செய்த ஈடுஇணையில்லாத பல்வேறு கைங்கர்யங்களில் ஈடுபட்டது மூலமும் ஏராளமான அரிய நூல்களை ஸ்ரீமடத்திற்கு தயாரித்துக் கொடுத்து ஸ்ரீகாமகோடி பீட மடத்திற்கு ஓர் அரிய பொக்கிஷமாக திகழ்ந்தார்.

குப்புசாமி அய்யர் ஸ்வாமிகளும், ஸ்ரீ பெரியவாளும்





## பரமபூஜ்ஜிய ஸ்ரீ மஹாதேவ தீர்த்தர் ஸ்வாமிகள் (சிமிழி வாஞ்சிநாத அய்யர் ஸ்வாமிகள்)



இவர் தஞ்ஞாவூர் ஜில்லா நன்னிலம் தாலுக்கா சிமிழி என்ற கிராமத்தில் 1901 ஜீன் முதல் தேதி அதாவது ஆனி மாதம் விசாகம் நக்ஷ்க்ஷத்திரத்தில் அவதரித்தார். இவரது தந்தை,தாயார் பெயர்கள் சுவாமிநாதய்யர் மாது சௌமீனாக்ஷ்க்ஷி அம்மாள் என்பதாகும். இவருடன் இரண்டு மூத்த சகோதரர்களும் மூத்த சகோதரிகள் 2பேரும் உண்டு.

இவர் கிரஹஸ்தர். இவருக்கு சங்கரன் என்ற மகனும் சௌஜெயலக்ஷ்மி, சௌகமலா என்ற மகள்களும் உண்டு. ஸ்வாமிகள் ஸ்கூல் பைனல் வரை முடித்து தனது கிராமத்தில் பரம்பரை முன்சீப் (மணியக்காரர்) ஆக பணி புரிந்தார். சுமார் 40 வருடங்கள் 1980 வரை பணியில் இருந்துள்ளார்.

இளம்வயதிலேயே மஹா ஸ்வாமிகளின் பேரில் பக்தி மேலிட்டு தனது 7வது சிறுவயதிலேயே ஸ்ரீபெரியவாளை தரிசித்து ஸ்ரீமடத்தில் கைங்கர்யம் செய்து தன்னை இணைத்துக் கொண்டார். 1923ஆம் ஆண்டுக்குப் பின்பு

அடிக்கடி ஸ்ரீபெரியவாள் முகாம்களுக்கு சென்று வர துவங்கினார். இவர் கிராம முன்சீப்பாகவும் ஸ்ரீமடத்தின் முத்திராதிகாரியாகவும் ஸேவை செய்தார்கள். கேம்புகளுக்கு சென்ற போதெல்லாம் பணி நிமித்தமாக அடிக்கடி ஊர் திரும்பி தனது அவசர பணிகளை கவனித்து விட்டு மீண்டும் பெரியவாள் கேம்புடன் சேர்ந்து விடுவார். வெகுநாள் விடுமுறை தேவை எனில் தனக்கு பதிலாக வேறு நபர்களை பணியில் அமர்த்திவிட்டு கேம்பில் தன் பணிகள் முடிந்ததும் மீண்டும் தன் வேலையில் சேர்ந்து விடுவார். ஸ்ரீமடத்தின் பூஜையின் போது ருத்ரபாராயணம், சந்தனம் அரைத்தல் போன்ற கைங்கர்யங்களில் ஈடுபடுவார்.

1933ல் மஹா ஸ்வாமிகள் தஞ்ஞாவூரில் சாதுர்மாஸ விரதம் முடிந்து காசி சேக்ஷத்திரம் சென்ற போது இவரும் அவருடன் நடைபயணமாகவே சென்றார். ஓர்முறை தனது குடும்பத்தாருடனும் பெரியவாள் காசியாத்திரையில் கலந்து கொண்டு தரிசித்து திரும்பினார். இவர் சிறந்த ஆசார, அனுஷ்டான சீலர். 1939ல் மஹா பெரியவாள் இராமேஸ்வரத்தில் ஸ்வாமிக்கு கங்காபிஷேகம் செய்து காசி யாத்திரை பூர்த்தி செய்து கும்பகோணத்தில் தங்கியிருந்த போது ஸ்ரீவாஞ்சி அய்யர் தன் ஊர் சென்று தங்கி விசேட காலங்களில் ஆசாரியாள்களை வந்து தரிசித்துச் செல்வார்.

1957 முதல் 1959 வரை மஹாஸ்வாமிகள் 18 மாதங்கள் சென்னை ஸமஸ்கிருத கல்லூரியிலும் மற்றும் உள்ள இடங்களில் பூஜையுடன் தங்கிய போது ஸ்வாமிகள் வாஞ்சிநாதர் கேம்பிற்கு வந்து பூஜை கைங்கர்யங்களில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார். ஸ்ரீபெரியவாள் சென்னையில் பல்வேறு இடங்களுக்குச் செல்லும் போதெல்லாம் அவருக்கு உதவியாக அவருடனேயே சென்று வருவார்.

1960ல் இவர் தனது வேலையை ராஜினாமா செய்துவிட்டு பெரியவாளுடன் தங்கி கைங்கர்யங்களை

செய்து வந்தார். 1978 முதல் 1984 வரை ஸ்ரீபெரியவாள் வடஇந்திய யாத்திரை சென்ற போது இவர் தனது உடல்நலம் கருதி சென்னையிலும் சிமிழியிலும் தங்கி இருந்தார்.

காஞ்சிபுரத்தில் சங்கரமடம் கட்டும்போது பூஜை மண்டபம் கட்டும் முன்பு அங்கு சஹஸ்ரபோஜனம் செய்வித்து மண்டபம் எழுப்பப்பட்டது. இதற்கு ஸ்ரீபெரியவாள் ஆஞ்ஞையின் பேரில் அனைத்து ஏற்பாடுகளையும் வாஞ்சிநாத ஸ்வாமிகளே செய்தார். வயது முதிர்ந்து வந்த போது மஹா ஸ்வாமிகள் தனது வடஇந்திய யாத்திரையை முடித்துக் கொண்டு காஞ்சியில் தங்கியிருந்த போது 1986 அக்டோபரில் விஜயதசமி அன்று சன்னியாஸ்ரமதிக்ஷைக்ஷை பெற்றுக் கொண்டு ஸ்ரீமஹா தேவதீர்த்த ஸ்வாமிகள் என்ற நாமகரணத்துடன் ஸ்ரீமடத்தில் ஓர் அறையில் தங்கி இருந்தார். இவருக்கு மஹா பெரியவாளிடம் கைங்கர்யங்களில் ஈடுபட்ட அரக்கோணம் பாலு என்ற இளைஞர் தேவையான சிக்ஷருகைஷகளை செய்து கவனித்துக் கொண்டிருந்தார். இவருக்கு உடல்நிலை பாதிக்கப்பட்டு 1990 ஆனி மாதம் க்ருஷ்ணபட்ச அஷ்டமிதிதி அன்று சித்தி அடைந்து அவருக்கு காஞ்சியில் உபநிஷத் மடத்தில் அதிஷ்டானம் அமைக்கப்பட்டுள்ளது.



# பூஜ்ய ஸ்ரீ நாராயண தீர்த்த ஸ்வாமிகள் (ஸ்ரீ ஓடாச்சேரி ஸ்வாமிகள்)



1937ல் ஓடாச்சேரிக்கு பக்கத்தில் மஹா பெரியவாள் முகாம் இருந்த போது ஒரு நாள் விடியற்காலை விஸ்வருப தரிசனத்தின் போது எட்டு வயது பையனாக ஓடாச்சேரி சுவாமிகள் அழுது கொண்டே பெரியவாளை நமஸ்கரித்த வண்ணம் இருந்தார். பெரியவாள் அவனை பக்கத்தில் நிற்க வைத்து எல்லோருக்கும் தரிசனம் கொடுத்து முடிந்து அவனைப் பார்த்து ஏனப்பா அழறே என்றார். என்னால் கஷ்டங்களை தாங்க முடியல்லே சன்ஸியாஸம் கொடுங்கோ என்றான். பக்கத்தில் இருந்தவர் பெரியவாள் கட்டளைப் படி அவனை சமாதானம் செய்து குடுமியை கட்டி விபூதி இட்டு அழைத்து உட்கார வைத்து விபரம் கேட்ட போது தனக்கு 1 வருடம் முன்பு தாய்தந்தையர் காலமாகி விட்டனர். என் மாமா வீட்டில் தான் இருக்கிறேன். மாமி அவர்கள் திட்டிக் கொண்டே இருக்கிறார்கள். ஒரு நாள் பசிக்கு சாதம் போடுங்கோ என்றேன். அவர்கள் மூன்று நாள் பழையதை தனித்தனியே கற்சட்டியில் வைத்துள்ளதை பார்த்து எடுத்துச் சாப்பிடும் போது 3ஆம் நாள் பழையதை எடுப்பதற்கு பதில் முதல் நாள் பழையதை சாப்பிட்ட போது மாமி வந்து பார்த்து பாவி நேத்து

பழையதை முழுங்கிட்டியே 3ஆம் நாள் பழையதை எடுத்து சாப்பிடக் கூடாதா நீ ஒன்றுக்கும் லாயக்கில்லை உருப்படமாட்டே பக்கத்தில் யாரே சுவாமிகள் வந்திருக்கிறாராம் அவரிடம் போய ஸன்னியாஸம் வாங்கி மடத்தில் சேர்ந்து விடு என்று திட்டி முதுகில் நான்கு அரை கொடுத்து விரட்டினார்களாம். பையனும் இரவு முழுவதும் தூங்காமல் தூக்கம் தாளாது பெரியவாளிடம் காலை வந்து சேர்ந்து இக்கதையை தெரிவித்த போது மஹா பெரியவாள் பயப்படாதே என்று சமாதானம் செய்து பெரியவாள் அங்கு இருந்தவர்களிடம் ஸம்ஸாரத்தில் அகடவிகடம் பண்ணாமல் வாழ முடியாது இப்படி இந்த பையனைப் போல கபடமில்லாத ஸாத்வீகளாக நேர்மையாக இருப்பது தான் ஸ்ன்னியாஸிக்கு வேண்டிய முதல் யோக்கியதை என்று சொல்லி சிரித்தார். மறுநாள் பெரியவாள் அந்த பையனின் மாமா மாமியை வரவழைத்து பையனுக்கு உங்க கையாலேயே நாளை நல்ல நாள் எனவே அவருக்கு உபநயனம் மடத்திலேயே செய்து விடுங்கள் என்று சொன்னார் உபநயனத்துக்குப் பின்பு அப்பையன் மடத்து வேத பாடசாலையில் சேர்த்தார்கள். அந்த பையன் மிக்க சூடிகையாக இருந்து நான்கு வருடங்களில் (12 வயது) யஜுர் வேதம் முழுவதும் அத்யயனம் செய்து நடுவில் சாஸ்திர பாடங்களையும் படித்தான். பிறகு இந்த சிறுவன் பெரியவாளுடன் தங்கி கைங்கர்யம் செய்து கொண்டிருந்தான்.

இரண்டு ஆண்டுகளுக்குப் பின்பு மஹாராஷ்டிராவிலிருந்து ஓர் வயதான சன்னியாஸி ராமேஸ்வரம் தரிசனம் முடிந்து திரும்பும் போது அவரது தண்டம் காணாமல் போனது. அவர் பெரியவாளிடம் வந்து தரிசித்து தனக்கு ஓர் தண்டம் வேண்ட பெரியவாளும் ஓர் புதிய தண்டம் அறுக்கிரஹித்து கொடுத்தார். அது முதல் அவர் பெரியவாளையே தனது குருவாக பாவித்து அவருடனேயே இறுதி காலம் தனது 105 வயது வரை காஞ்சியில் இருந்தார். அவர் தினமும் பெரியவாளுக்கு பாத பூஜை செய்வார். ஓர் சமயம் பெரியவாள் மலேரியா நோய்

கண்டு 1 மாத காலம் கஷ்ட்டப்பட்ட போது அவர் பெரியவாளை தொட்டு ஸ்னானம் செய்வித்தல் போன்ற அனைத்து கைங்கர்யங்களையும் செய்து உதவினார். எனவே பெரியவாள் அந்த ஒடாச்சேரி மாணவனை மஹாராஷ்டிர ஸ்வாமிகளுக்கு வேண்டிய பணிவிடைகளை செய்ய பணித்தார். இந்த சிறுவனும் ஸ்வாமிகள் அருகிலேயே இருந்து அவர் குறிப்பிடும் கிரந்தங்களைப் படித்து அவர் அளிக்கும் விளக்கங்களையும் கேட்டுக் கொள்வார். ஓர் நாள் மஹா பெரியவாள் அந்த வயது முதிர்ந்த சன்னியாஸியை அழைத்து அவர் சிஷ்ய பையனுக்கு சன்னியாஸ திக்ஷைக்ஷ கொடுக்கும் படி கூறி சன்னியாஸம் வழங்கி அவருக்கு நாராயண தீர்த்த சுவாமிகள் என திக்ஷக்ஷா நாமம் வழங்கப்பட்டது. அந்த சிறுவயதான ஸ்வாமிகளும் தினமும் காஞ்சியில் சில வீடுகளில் பிக்ஷைக்ஷ எடுத்து அதை அவருக்கு அளித்து பிறகு சேஷத்தைத்தான் தானும் பிக்ஷைக்ஷ பண்ணுவார். மடத்தின் லைப்ரரியிலிருந்து புத்தகங்களை படித்து அவரும் எல்லா க்ஷேத்திரங்களையும் சென்று தரிசிப்பார்.

போகும்போது ஓர்மடி ஸஞ்சியில ஒரு மாற்று வஸ்திரம் கௌபீனம் இவற்றை எடுத்துக் கொண்டு பல க்ஷேத்திரங்களுக்கு சென்று அங்கு உள்ள குளங்களில் ஸ்னானம் செய்து ஈர துணிகளுடனேயே ஆலயங்களின் அனைத்து ஸன்னிதிகளுக்கும் சென்று தரிசிப்பார். பஸ் ஸ்டாண்டில் அங்கு உள்ளவர்கள் இவர் மேல் பரிதாபம் கொண்டு பஸ் டிக்கட் வாங்கி இவர் செல்ல வேண்டிய இடங்களில் இறக்கி விடுவார்கள். அங்குள்ளவர்கள் யாரேனும் பிக்ஷைக்ஷக்கு அழைத்தால் ராமநாமம் என்னோடு சொல்லிக் கொண்டே வந்தால் உங்கள் இல்லம் வந்து பிக்ஷைக்ஷ செய்கிறேன் என்று கூறி அவர்களுடன் இல்லங்களுக்குச் செல்வார்.

பெரியவாள் 1978 முதல் யாத்திரை ஆந்திரம், கர்நாடகா, மஹாராஷ்டிராவில் பல இடங்களுக்கு சென்ற போதும் ஸ்வாமிகளும் அவ்வப்போது யாத்திரையில் கலந்து

கொண்டு பெரியவாளுடன் தங்கி இருந்தார். ஹாஸ்பெட்டில் அருகே உள்ள அனந்தபத்மநாப ஸ்வாமி கோயிலில் ஏகாதசி அன்று இரவு முழுவதும் ஸ்ரீருத்ரம். ருத்தரத்ரிசிதி உபநிஷத் எல்லாம் சொல்லிக் கொண்டு இருந்து அவ்வப்போது சமஸ்கிருதத்தில் பெரியவாளுடனும் பேசிக் கொண்டே இருந்தார். சதாராவில் பெரியவாள் நீண்ட நாள் முகாம் செய்த போது கேரள புது வருட விஷீக்கணி வைக்க நான் (கே.எஸ்.சீனுவாசன்) சதாரா சென்று விஷீக்கணி அழகுபடுத்தி வைத்திருந்த போது காலை 3 மணி அளவில் பெரியவாள் அவைகளை தரிசித்து நன்றாக உள்ளது. பக்கத்து வீட்டில் ஒடாச்சேரி சுவாமிகள் உள்ளார். அவரை அழைத்துக் கொண்டு வந்து காண்பி என்றார். அவரும் வந்து பார்த்து ஒஹோ நீங்கள் கேரளக்காரரா நன்றாக இருக்கிறது என சொல்லி மகிழ்ந்தார். புதுப் பெரியவாள் நசரத்பேட்டையில் நவராத்திரி கேம்பில் இருக்கிறார் என தெரிந்து வக்கீல் நாகராஜ அய்யர் துணையுடன் சென்னை சென்று நவராத்திரி பூஜைகளில் கலந்து கொண்டார். கதக் என்ற ஓர் கிராம கேம்பில் மகா பெரியவாளுடன் இருந்த போது ஓர் திண்ணையிலிருந்து விழுந்து காலில் எலும்பு முறிவு ஏற்பட்டு நடக்க முடியாது மிகவும் சிரமப்பட்டார். பெரியவாள் உடனே வேதபுரி மற்றும் ரமேஷ்பட் என்பவர்களுடன் சுவாமிகளை ஓர் காரில் குரு சங்கர் என்ற ஹிப்ளிபக்தர் உதவியுடன் அங்குள்ள மருந்துவமனையில் சேர்த்து ஆபிரேஷன் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனால் சுவாமிகள் தனக்கு ஆபிரேஷன் வேண்டாம் என மறுத்தார். அவருக்கு தெரியாது எக்ஸ்ரே தான் எடுக்கப் போகிறார்கள் என ஆபிரேஷன் தியேட்டரில் படுக்க வைத்த போது வலி தாங்காது சுவாமிகள் ஸமாதி நிலையில் மயங்கியபடியே இருந்த போது அவருக்கு ஆபிரேஷன் செய்து கட்டு போட்ட பின்பு 2 மணிநேரம் அவர் தனது ஸமாதி நிலையிலிருந்து கலைந்து நான்கு வாரங்கள் மருந்துவமனையிலேயே இருந்து தோள்கட்டை உதவியுடன் மெதுவாக நடக்க ஆரம்பித்து வெளிவந்தார். பெரியவாள் பெல்காம் வியாஸ பூஜைக்காக அவருடன் இருந்த வேதபுரி திரும்பி செல்லும் போது சுவாமிகளும் நானும்

பெரியவாளை தரிசிக்க வருகிறேன் என ஓர் காரில் அழைத்துச் சென்றனர். பின்பு காருடன் பெரியவாள் தங்கி இருந்த ஹிப்ளியில் ஓர் இடத்திற்கு அழைத்துச் சென்ற போது பெரியவாள் அவர் நடந்து வர வேண்டாம் நானே வருகிறேன் என கூறி அவர் கார் அருகே வந்து அவருக்கு தரிசனம் அளித்து விசாரித்தார். அப்போது அவர் எனக்கு ஆபிரேஷன் வேண்டாம் மோக்ஷக்ஷம் கொடுங்கள் என அழுதப் படியே வேண்டினார். ஸ்ரீபெரியவாள் கவலைப் படாதீர்கள் எல்லாம் சரியாகிவிடும் என்றார். ஆபிரேஷன் நடந்து 4 ஆண்டு காலம் அவர் ஜீவித்து இருந்து மீண்டும் பெரியவாள் புதுப் பெரியவாள் கேம்புகளுக்கும் சென்றார். பெல்காம் வியாஸ பூஜையில் பெரியவாளுடன் பூஜையில் கலந்து கொண்டார். காஞ்சி உபநிஷத் ப்ரமஹேந்திர மடத்திலிருந்து ஒடாச்சேரி ஸ்வாமிகளின் சிஷ்யர் ஒருவர் அங்கு பிரசாதங்களுடன் வந்து அவரை பிரதக்ஷிணம் செய்து பிரசாதங்களை அளித்து நமஸ்கரித்து சிறிது நேரம் அவரிடம் பேசி சென்றார். அவர் பெரியவாள் காம்பில் இருந்தால் சிரமப்படுவார் என கருதி பெரியவாள் உத்திரவின் படி குருசங்கர் என்ற பக்தர் உதவியுடன் அவரை ரயிலில் அறக்கோணம் வரை அழைத்துச் சென்று பின்பு ஓர் காரில் வாலாஜா பேட்டை சுந்தரமூர்த்தி என்ற பெரியவாளின் அனுக்க தொண்டரிடம் ஒப்படைத்து அவர் வீட்டில் இருக்கச் செய்தார்கள். அங்கு அவர் வீட்டில் சுந்தரமூர்த்தி அய்யரின் மகன் இந்துகுமார் என்பவர் அவருக்கு வேண்டிய் பணிவிடைகளை செய்து வந்தார். சுவாமிகளும் அவருக்கு ஸ்ரீருத்ரம் அத்யானம் செய்து வைத்தார். அவர் ரோடில் தோள்கட்டையுடன் நடந்து செல்வதைப் பார்த்த ஓர் குதிரைவண்டிக்காரன் பரிதாபப்பட்டு அவரை அவ்வப்போது அவர் செல்ல வேண்டிய இடங்களுக்கு காசு வாங்காது வண்டியிலேயே அழைத்துச் சென்றான்.

ஸ்ரீபுதுப்பெரியவாள் முதன்முதலாக பத்ரிநாத் கேதாரநாத் யாத்திரை செல்லப் போவதாக அறிந்து தானும் அவருடன் செல்ல வேண்டும் என கிளம்பி சென்று

அவர்களுடன் சேர்ந்து கொண்டார். சுந்திரமூர்த்தி குடும்பத்தார் உங்களது உடம்பு ஒத்துக்காது போக வேண்டாம் என்ற போது அவர் பரவாயில்லை கவலைப் படாதிர்கள் கடைசி காலத்தில் எல்லா இடமும் சென்று உங்களுடன் வந்து சேர்ந்து கொள்கிறேன் என சமாதானம் செய்து சென்றார். பத்ரிநாத் யாத்திரையில் ஒரு நாள் மாலையில் புதுப்பெரியவாள் கங்கை கரையில் நடைபெறும் சங்கர தீபாராதனை தரிசிக்கச் சென்று பார்த்து விட்டு தொண்டர்களிடம் ஒடாச்சேரி சுவாமிகளை கூப்பிடச் சொன்னார். ஆனால் அங்கிருந்து அவர் வேறு எங்கோ கிளம்பி சென்று விட்டார். புதுப்பெரியவாள் போலீஸ் ஜவான்கள் மூலம் இரவு முழுவதும் பல இடங்களில் தேடியும் காணவில்லை. மறுநாள் காலை புதுப்பெரியவாள் அங்கு அலகாநந்தாவுக்குச் சென்று போது அங்கே ஒடாச்சேரி சுவாமிகள் நதிக்கரையிலிருந்து வஸ்திரம் கௌபீனம் எல்லாம் பனிக்கட்டி உறைய நடந்து வந்தார்கள். பெரியவாள் முகாம் வாசலில் வெளியில் வந்த போது ஒடாச்சேரி ஸ்வாமிகளைப் பார்த்து உடனே தனது தொண்டர்களை அனுப்பி அவரது வஸ்திரங்கள் பனிக் கட்டியுடன் உள்ளது கண்டு அவைகளை அவழ்த்து எடுத்து நல்ல முரட்டு கம்பிளிகளால் அவரது உடலை தேய்த்து விடச் செய்து தலை முதல் கால் வரை புதுக் கம்பளியால் சுற்றி அமரச் செய்தார்கள். அந்த நிலையிலும் அவர் சிரித்துக் கொண்டே பெரியவாளை வந்தனம் செய்த போது புதுப்பெரியவாள் அவருடைய ஸன்னியாஸ சமாதி முதிர்ச்சியைப் பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். ஹரித்வார் காம்புக்குப் பின்பு ஸ்வாமிகள் தனியாக கிளம்பி பண்டரிபுரம் வந்து மஹா பெரியவாளுடன் வியாஸ பூஜையில் கலந்து கொண்டார். வியாஸ பூஜை முடிந்ததும் மஹா பெரியவாளுடன் தகுந்த துணையுடன் அவரை மாயவரம் அனுப்பி வைத்தார். அவர் அங்கிருந்து பல க்ஷேத்திரங்கள் சென்று தரிசித்து பங்குனி உற்சவத்தின் போது ஓர் இரவு 10 மணிக்கு வாலாஜாபேட்டை வந்து சுந்தரமூர்த்தியர் வீட்டு கதவை தட்டி சிரித்த படியே நான் வந்து விட்டேன் என்று தெரிவித்தார். அவர் மஹாபெரியவாள்

புதுப்பெரியவாள் ஆஞ்ஞை படி கரூர் ஸ்வாமிகள், நாசிக் சுவாமிகள், மல்லாஜி ஸ்வாமிகள் என பலருக்கு ஸன்னியாஸ்ரம தீக்ஷைகை அளித்துள்ளார். அவர் சில நாட்கள் இராணிப்பேட்டை சென்று தங்குவது மீண்டும் சுந்திரமூர்த்தி அய்யர் வீட்டில் தங்குவது என இருந்தார்.

ஸ்ரீ ராமநவமிக்கு இரண்டு நாட்களுக்கு முன் சுந்தரமூர்த்தி அய்யர் வீட்டில் வழக்கப்படி வாசல் பெஞ்சில் படுத்துக் கொண்டு தன்னை யாரும் தொட வேண்டாம் மேல் வஸ்திரம் நழுவினால் மட்டும் எடுத்து போர்த்தினால் போதும் என்று கண்முடி சிறிது நேரம் இருந்து பின்பு கண் விழித்து கங்காதீர்த்தமும் துளசியும் எடுத்துக் கொண்டார்கள். அவர் அருகே சுந்தரமூர்த்தி மகன் இந்து பிரகாஷ் அமர்ந்து விசிறிக் கொண்டிருந்தான். அவர் கண் விழித்து பார்த்து உனக்கு தெரியுமா ஸன்னியாஸிசித்தியானால் அவருடைய தண்டத்தை மூன்று துண்டாக உடைக்க வேண்டும் என்று கேட்டு கண்முடி விட்டார். டாக்டர் வேணுகோபால் என்பவர் ஒருவர் வந்து பார்த்தார். உடல்நிலையில் எந்த கோளாறும் இல்லை என்று தெரிவித்தார். 3ஆம் நாள் காலை ஸ்ரீராமநவமி அன்று எழுந்து உட்கார்ந்தார்கள். புதுப்பெரியவாளுக்கு தகவல் அனுப்பி அவர் ஒரு தொண்டர் மூலம் பணம் கொடுத்து அனுப்பினார்கள். மேலும் காஞ்சியிலிருந்து சந்துரு, கிருஷ்ணமூர்த்தி ராமநாத சாஸ்திரிகள் வந்த உடன் சுவாமிகள் அவர்களை வேத பாராயணம் செய்ய சொன்னார்கள். ஒரு பண்டிதரைக் கொண்டு மாண்டுக்ய உபநிஷத் பாஷ்யம் படிக்கச் சொன்னார்கள். ராமநவமிக்காக பாகவதர்கள் அஷ்டபதி முதலிய நாம சங்கீர்தனங்களை உரத்த குரலில் பாடிக் கொண்டிருந்த போது சரியாக பகல் 3.45 மணிக்கு ஸ்வாமிகள் சுவாஸத்தை உள்ளே இழுத்துக் கொண்டு கண்களில் இருந்து ஓர் மின்ஒளி பிறக்க மலர்ந்த முகத்துடன் சித்தி அடைந்தார்கள். ராமநாம கீர்த்தனத்துடனும் வேத பாராயணத்துடனும் மஹாபிஷேகம்

நடந்தது. பின்பு மஹா பெரியவாள் அனுக்கிரஹத்துடன் காசி விஸ்வநாதர் ஆலயத்தின் பின்பக்கம் ஸ்ரீமடத்திற்கு அன்பளிப்பாக கொடுத்த இடத்தில் அடக்கம் செய்து மேலே அதிஷ்டானமும் அமைக்கப்பட்டது. 21.4.83 ருத்ரோத்காரி வருடம் சித்திரை 8 வியாழக்கிழமை ஸ்ரீராம நவமி அவர் சித்தி அடைந்த நாள். ஸ்ரீசுந்தரமூர்த்தி அய்யர் குடும்பத்தாரால் பிரதி ஆண்டு சித்திரை மாதம் அவரது ஆராதனைக்கு ஓர் டிரஸ்ட் நிறுவப்பட்டு நன்கு நடைபெற்று வருகிறது. சுவாமிகள் ஸித்தி அடைந்த தினம் மகா பெரியவாள் கர்நூல் திரும்பும் வழியில் கேடங்கல் என்ற கிராமத்தில் பிரதோஷம் அன்று பூஜைக்காக அமர்ந்துள்ள போது அவருக்கு எதிரே இருந்த மேடை மீது இருந்து ஓர் மட்டை தேங்காய் தானாகவே உருண்டு கீழே விழுந்த போது அதனை கவனித்த பெரியவாள் ஓர் மகாத்மா தனது சரீரத்தை விட்டு விதேஹகை வல்லியம் அடைந்து விட்டார் என்பதைத் தான் இது காட்டுகிறது என்றார். ஒடாச்சேரி ஸ்வாமிகள் ஸித்தி அடைந்த செய்தியை அவரிடம் தெரிவிக்கச் சென்ற போது அங்கு இருந்தவர்கள் இந்த செய்தியை வந்தவர்களிடம் தெரிவித்தார்கள். ஒடாச்சேரி ஸ்வாமிகள் அவர்கள் ஓர் அவதார புருஷ மஹாத்மா தேனம்பாக்கத்தில் மஹா ஸ்வாமிகள் தங்கியிருந்த போது அவரும் அங்கு தங்கி இருந்தார். காலை வேளைகளில் அங்கு கோவிலின் வெளிப்புறம் உள்ள துர்கை ஸன்னதியில் அமர்ந்து தியானத்தில் இருப்பார். நான் (ஸ்ரீ சீனுவாசன்) பிரதி தினமும் காலை 4மணிக்கு எழுந்து ஸ்னானம் முடிந்து சைக்களில் அங்கு சென்று பெரியவாள் பூஜைக்கு வேண்டிய தும்பை பூ செம்பருத்தி, பவழமல்லி போன்ற புஷ்பங்களையும் பெரியவாள் பிக்ஷைக்ஷுக்கு வேண்டிய பழங்கள் சிறிது வெண்ணை ஆகியவைகளை அவர் எதிரே வைத்து நமஸ்கரித்து பின்பு உள்ளே ஸ்ரீகண்டன் பாலு அவர்களிடம் தருவது வழக்கம். சில நாட்கள் பொன்னம்மாள் என்ற பெயருடைய எனது தந்தையின் சகோதரியும் கொண்டு தருவார்கள். இவைகளையெல்லாம் ஒடாச்சேரி ஸ்வாமிகளும் அமர்ந்து பார்த்துக் கொண்டிருப்பார். பெரியவாள் தரிசனம்

முடிந்ததும் நான் அங்கேயே உள்ள பிரும்மபுரிஸ்வரர் கோயில் உள்ளே சென்று சுவாமி தரிசனம் செய்து பிரதக்ஷிக்ஷணமாக வரும் போது அங்கு அமர்ந்து இருக்கும் ஸ்வாமிகளின் அருகே சென்று நமஸ்கரித்து வீடு திரும்புவேன். அப்போது 1 ஆண்டுக்கு முன் தான் எனக்கு திருமணம் நடந்தது. ஸ்ரீபெரியவாளை தரிசிக்கச் செல்லும் போது பஞ்சு கச்சக வேஷ்ட்டி அணிந்து செல்வது என்பது தெரியாது அது போல அணிந்து கொள்ளும் முறையும் தெரியாது சாதாரண உடையில் தான் செல்வது வழக்கம். ஓர் நாள் ஒடாச்சேரி ஸ்வாமிகள் என்னை அருகே கூப்பிட்டு உட்கார வைத்து நீங்கள் பிரம்மசாரியா அல்லது கிரஹஸ்தரா, தினமும் பெரியவாள் பூஜைக்கு புஷ்பம் கொண்டு வரும் பொன்னம்மாள் மாமி மகனா எனக் கேட்டார் நான் விபரமாக தெரிவித்த உடன் கிரஹஸ்தராக இருந்தால் ஏன் இப்படி வேஷ்ட்டியுடன் தரிசிக்க வருவது சரியில்லை கச்சம் கட்டிக் கொண்டு தானே வர வேண்டும் என்றார். நான் சமீபத்தில் தான் திருமணம் நடந்தது. எனக்கு வேஷ்ட்டி அது போல தரித்துக் கொள்ள தெரியவில்லை என்ற போது உங்கள் குடும்பவாத்தியாரைக் கேட்டு அறிந்து கொண்டு அந்த மாதிரி உடையுடன் வாருங்கள் என்றார். நானும் பின்பு அம்மாதிரி உடை அணிந்த பின்பு பெரியவாள் தரிசனத்திகு செல்லும் வழக்கத்தை கடைபிடித்தேன். பின்பு ஒரு நாள் அவர் என்னைக் கூப்பிட்டு தனது அருகே உட்கார வைத்து (வில்வ மரம் அருகில்) காஞ்சிப்புராணம் புத்தகத்தை அளித்து தினமும் ஓர் அரைமணி நேரம் 63 நாயன்மார்களது சரித்திரத்தை அவருக்கு படித்துக் காண்பிக்க தெரிவித்து நானும் பிரதி தினம் அவருக்கு படித்துக் காண்பித்து அந்த சுவாமிகளிடம் எனக்கு ஏற்பட்ட மறக்க முடியாத அனுபவம் ஆகும். அவர் தேனம்பாக்கத்தில் பெரியவாளுடன் இருந்த போது அங்கேயே அவருக்கு தேவையான உணவு வசதிகள் இருந்தாலும் தேனம்பாக்கத்தில் தினசரி தரிசனம் செய்ய வரும் எல்.ஐ.சி.கோபாலகிருஷ்ணன் போன்ற பலர் இல்லங்களுக்கு நடந்து சென்று பிக்ஷை பெற்று உணவு அருந்தும் வழக்கத்தை கடைபிடித்தார்.

ஸ்ரீ ஓடாச்சேரி ஸ்வாமிகள் ஸ்ரீ பெரியவாளுடன்





# பூஜ்ஜிய ஸ்ரீ நாராயணந்த ஸரஸ்வதி ஸ்வாமிகள் (பூஜ்ஜிய ஸ்ரீஉகார் ஸ்வாமிகள்)



இவர் இளம்பிராயத்திலேயே பிரம்மசர்யாஸ்ர மத்திலிருந்து சன்னியஸித்த வைராக்கிய நிதி. பெரிய வித்வான் அனுபவமிக்க வைதியர். ஸமஸ்கிருத மஹாராஷ்டிர பாஷைகளில் நல்ல கவிபாடகர் ஸனாதன தர்ம பிரசாகர் கர்நாடக மஹாராஷ்டிர பிராந்தியங்களில் கணக்கில்லாத அபக்தர்களுக்கும் சந்தோஷ பூர்வமாக அங்கிகரிக்கப்பட்டவர் இப்பேர்பட்ட ஸ்வாமிகள் மஹா பெரியவாள் 1978ல் ஆந்திரம், கர்நாடகம், மஹாராஷ்டிரா பகுதிகளில் விஜயம் செய்த போது ஹம்பி ஆஸ்பெட்டில் விருபாக்ஷ்க்ஷர் சுவாமியை தரிசித்து சுற்றுப்புறம் உள்ள சரித்திர முக்கியத்வம் வாய்ந்த பகுதிகளுக்கு கால்நடையாகவே சென்று கமலாப்பூர் செல்லும் போது உகார் சுவாமிகள் ஸ்ரீபெரியவாளை சந்தித்து வந்தனங்களை சமர்ப்பித்து பல முகாம்களுக்கு பெரியவாளுடனேயே சென்றார். பல முக்கிய விசேஷ நாட்களில் ஸ்ரீபெரியவாளுடன் அருகே அமர்ந்து சாஸ்திர தர்கங்களில் கலந்து கொள்வார். இவர் பெரியவாளுடன் யாத்திரையில் கலந்து கொண்டு தனது ஊருக்கு பெரியவாளை அழைத்துச் செல்ல விரும்பி அடிக்கடி ப்ராத்தித்துக் கொண்டே இருந்தார். யாத்திரையில் அவரது

ஊர் நெருக்கத்தில் வந்த போது பெரியவாள் அவர் ஊர் உள்ள திசை செல்லாது கோகக் என்ற ஊர் பக்கம் சென்றார். அப்போது உகார் ஸ்வாமிகள் பெரியவாள் தனது ஊருக்கு வரமாட்டார் என வருத்தப்பட்டு எவரிடமும் சொல்லிக் கொள்ளாது புறப்பட்டு சென்று விட்டார். ஸ்ரீபெரியவாள் அவரைக் காணாது கூப்பிட்ட போது செய்தி அறிந்து உடனே தனது பிராயண திட்டத்தை மாற்றிக் கொண்டு தான் இருந்த இடத்திலிருந்து 70 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள உகாருக்கு 10 தினங்கள் நடந்து 16.2.1979ல் ஊர் ஊள்ளே சென்றார். அது பெரிய ஊர் ஆனதால் ஏராளமான மக்கள் ஊர்வலமாக மேளதாளம் பஜனைகளுடன் வரவேற்பு அளித்து அழைத்துச் சென்றனர். அப்போது உகார் சுவாமிகளும் நேரில் பெரியவாளை தரிசித்து வந்தனம் செய்து நின்றார். ஆனால் ஸ்ரீபெரியவாள் ஏதும் பேசாது மௌனமாகவே இருந்தார். பின்பு சில நாட்கள் பெரியவாளை தரிசித்து சமஸ்கிருதத்தில் பேசிய போதும் பெரியவாள் 1மாத காலம் ஏதும் பேசாது மௌனமாகவே இருந்தார். பின்பு ஓர் நாள் பெரியவாளை நமஸ்கரித்து நானும் தவறு செய்து விட்டேன் என அழுது புரண்டு நமஸ்கரித்த போது பின்பு பெரியவாளும் சகஜமாக பேச ஆரம்பித்து 4 மாத காலம் அவ்வூரில் தங்கி இருந்தார். ஸ்ரீபெரியவாள் உத்திரவுப் படி ஸ்ரீஅவதானி ஜனார்தன சுவாமிகளுக்கும் ஸதாராவில் ஸன்னியாஸ்ரம திக்ஷைக்ஷை அளித்து மகிழ்ந்தார். மஹா ஸ்வாமிகள் யாத்திரை முடிந்து காஞ்சி திரும்பிய இரு மாதங்கள் கழித்து உகார் சுவாமிகளும் காஞ்சி க்ஷேக்ஷத்திரம் வந்து அனைத்து கோவில்களையும் தரிசித்து பெரியவாளை தரிசித்து உத்திரவு பெற்று தனது சொந்த ஊர் சென்று காசியில் சில காலம் தங்கி அங்கேயே சித்தி அடைந்தார்.

ஸ்ரீ உகார் ஸ்வாமிகள் பெரியவாளுடன் யாத்திரையில் கலந்துகொண்ட நிழற்படங்கள்















# பரம பூஜ்ய ஸ்ரீ கிருஷ்ணானந்த இந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் (கண்ணன் ஸ்வாமிகள்)



ஸ்வாமிகளின் பூர்வாஸ்ரம தந்தை ஸ்ரீ பாலகிருஷ்ணய்யர் என்பது தாயார் மாதுசௌ ராஜம்மாள் என்பதாகும். இவர்கள் கேரளத்தைச் சேர்ந்தவர்கள். தாய்க்கு பாலக் காட்டிலுள்ள நெம்மாரா என்ற ஸ்தலமும் தந்தைக்கு குணிச்சேரி கிராமமும் ஆகும். ஸ்வாமிகள் 1.1.1952ல் சென்னை திருவல்லிக்கேணியில் அவதரித்தவர். இவருக்கு உடன் பிறந்த சகோதரி ஒருவர் மட்டுமே ஸ்வாமிகளுக்கு பெற்றோர் சூட்டிய நாமகரணம் கண்ணன் என்பதாகும். இவர் S.S.L.C வரை படித்து பல கம்பெனிகளிலும் பலதுறையிலும் பணி புரிந்துள்ளார். ஸ்ரீமஹா பெரியவர்கள் 1957-58ல் சென்னை மாநகரம் விஜயம் செய்து பலபேட்டைகளில் தங்கியிருந்த போது முதன்முதலாக மாம்பலம் கேம்பின் போது மஹா பெரியவாளை தரிசிக்கும் பாக்கியம் இவருக்கு கிடைத்தது. அதிலிருந்து தொடர்ந்து

தனக்கு நேரம் கிடைக்கும் போதெல்லாம் அவர் இருக்கும் இடம் சென்று தரிசித்து வந்தார். இவர் 10வது படிக்கும் போதே புகைப்பட கலையில் கவனம் திரும்பியது இவர் காஞ்சி மடத்திற்கும் சென்று மடாதிபதி ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளை போட்டோ எடுப்பது வழக்கம். அவர் தான் ஓர்முறை ஸ்ரீபெரியவாளையும் நிறைய படம் எடு என்றார். ஸ்ரீபெரியவாள் தேனம்பாக்கத்தில் நெடுநாட்கள் தங்கி இருந்த போது கண்ணன் ஸ்வாமிகளும் அடிக்கடி சென்று தரிசிக்கும் போது மஹா பெரியவாளையும் படம் எடுக்க வேண்டும் என அவா ஏற்பட்டது. ஆனால் அவர் அனுமதியில்லாது படம் எடுப்பது கடினம். எனினும் அவரது அதிர்ஷ்டம் 1974 ஆம் ஆண்டு முதன் முதலாக பெரியவாள் அனுமதியோடு படம் எடுத்தார். மஹா ஸ்வாமிகள் கண் ஆப்ரேஷன் பிறகு கலவையில் தங்கியிருந்த போது தான் முதன் முதலாக பிளாஷ் போடாது பெரியவாள் நின்ற கோலத்தில் முதல் படம் எடுத்தார். இவருக்கு 1981ல் தஞ்சாவூரை சேர்ந்த மைலாப்பூர் பெண்ணை பெற்றோர்கள் திருமணம் நடத்தி வைத்தார்கள். பல ஆண்டுகள் குடும்ப வாழ்க்கையை மேற்கொண்ட இவருக்கு பாலச்சந்திரன் என்கிற மகனும் சுவாமிநாதன் என்ற மகனும் உண்டு அவர்களுக்கு 7 வயது உடைய மகனும் 2 வயதுடைய மகளும் உண்டு. இருமகன்களுமே கம்பியூட்டர் சம்பந்தப்பட்ட பெரிய நிறுவனங்களில் பணிபுரிகின்றனர்.

ஸ்வாமிகள் மஹாஸ்வாமிகள் சித்தி அடைந்த பின்பும் அடிக்கடி அவரது அதிஷ்டானத்திற்கு வந்து தரிசித்துச் செல்வார். நவராத்திரி உற்சவ காலங்களில் பல

ஆண்டுகள் விதவிதமான புஷ்பங்களை கூடை கூடையாக நண்பர்கள் உதவியோடு கார் மூலம் சென்னையிலிருந்து கொண்டு வந்து அவைகளை தனது கரங்களாலேயே வண்ண வண்ண மாலைகளாக்கி அதிஷ்டானத்தில் அம்மகானுக்கு தினசரி அலங்கரித்தது காணக் கிடைக்காத கண்கொள்ளா காட்சியாகும். இவரைப் போலவே திருச்சியிலிருந்து ஹரிஹரன் என்ற வயதான பக்தர் ஒருவரும் தேனம்பாக்கம் தரிசனத்திற்கு வந்து சாதாரணமான பல தத்ருபமான படங்கள் அடிக்கடி எடுப்பார். 1978 ஆம் ஆண்டு யாத்திரையிலும் கண்ணன் ஸ்வாமிகள் அவர் சென்ற இடமெல்லாம் சென்று பலவிதமாக படங்களை எடுத்துள்ளார். இதைக் கவனித்த மஹா ஸ்வாமிகள் தான் இவரை போட்டோ கண்ணா என கூப்பிட்டு அந்த பெயரே இவருக்கு போட்டோ கண்ணன் என நிலை ஆயிற்று. சுமார் 150க்கும் மேலான பில்ம் ரோல்களில் மஹா ஸ்வாமிகளை படம் எடுத்துள்ளார். இவற்றில் 150க்கும் மேற்பட்ட படங்கள் மிக அற்புதமான படங்கள். அடையாற்றில் ஓர் கண்காட்சியையும் பெங்களூரிலும் மடத்திலும் ஓர் போட்டோ கண்காட்சி நடத்தியுள்ளார். பாரத்வித்யாபவன் நிறுவகத்தார். இவரது போட்டோ தொகுப்புகளை பெற்று அமெரிக்காவிலும் ஓர் சிறப்பு கண்காட்சியை நடத்தினார்கள். மஹா பெரியவாளிடம் ஏற்பட்ட ஈடு இல்லாத பக்தியின் காரணமாகவும் அவரை ஆயிரக்கணக்கில் போட்டோக்கள் எடுத்தது அவரது மனதில் நீங்காத இடம் பெற்று குடும்ப பந்தங்களிலிருந்து விடுபட்டு சன்னியாஸ ஆஸ்ரமம் பெற்றுக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டு காமகோடி பீடத்தின் பீடாதிபதி ஸ்ரீஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளிடம் ப்ரார்த்தித்துக்

கொண்டார். அவரது வேண்டுகோளின் பேரில் ஸ்வாமிகளும் 1913ஆம் ஆண்டு சிவராத்திரி புண்ணிய தினந்தன்று காஞ்சி சேஷத்திரத்திலேயே சன்னியாஸ்ரம ஆஸ்ரமம் அளித்து பூஜ்ஜிய ஸ்ரீ கிருஷ்ணானந்த இந்திர சரஸ்வதி என்ற நாமத்தை அளித்து ஆஸ்ரமம் அளித்த போது அவரது குடும்பத்தார் அனைவரும் வந்து இருந்தனர். இவர் முக்கியமாக ஆதி சங்கரா முதல் 67 ஆசாரியார்களது சித்ரங்களையும் பிரபல ஓவிய கலைஞர் திரு.எஸ்.ராஜம் மூலம் சித்ரமாக வெளிவர தொண்டு புரிந்துள்ளார்.ஸ்ரீ மடத்திலேயே தங்கி உள்ளார். இவர் தினசரி மஹாஸ்வாமிகளின் அதிர்ஷடான பூஜைகள் தரிசனம் சந்திரமௌளீஸ்வரர் பூஜை தரிசனம் செய்து கொண்டு ஸ்ரீபுதுப் பெரியவாளை தரிசித்து வந்தனங்களை தெரிவித்து அவர் அருகே மக்கள் தரிசன நேரங்களில் தனியாக அமர்ந்து கொண்டு த்யானங்களை மேற்கொண்டு மடத்தின் ஓர் சிறிய அறையிலேயே தங்கி இருந்து வருகிறார்.



# திருவாரூர் வெங்கட்ராம ஸ்வாமிகள்



திருவாரூர் வெங்கட்ராம அய்யர் என்பவர் சமையல் கலையில் உள்ள அனுபவத்தால் ஹோட்டல் நடத்தி வந்தார். திருமணம் ஆகாத பிரம்மசாரி. தொழிலில் நஷ்டம் ஏற்படவே சிரமப்பட்டு ஹோட்டலை விட்டு மஹா பெரியவாள் இளையாத்தங்குடியில் இருந்த போது அவரை தரிசித்து பிரார்த்தித்தார். ஸ்ரீபெரியவாளும் மடத்தில் தங்கி முடிந்த கைங்கர்யங்களை செய்து வர சொல்லி இருக்கச் செய்தார். அவருக்கு சில சுத்திகள் செய்விக்கப்பட்டு மடத்தில் நைவேத்தியம் போடும் கைங்கர்யத்தில் முதலில் நியமிக்கப்பட்டு பல வருடங்கள் இப்பணியில் இருந்தார். பின்பு உடல் நிலைக்கருதி அவர் முக்கியமாக ஸ்ரீ பெரியவாளின் வஸ்திரங்களை சுத்தம் செய்து உலர்த்தி எடுத்து மடியாக வைத்து வரும் பணியை செய்து வந்தார். பெரியவாள் மடத்தின் பணிகளை துறந்து தேனம்பாக்கத்தில் இருந்த போது இவரும் அங்கேயே உடன் இருந்தார். மீண்டும் உடல் நலம் சரியில்லாத போது மடத்திலிருந்து திருவாரூர் சென்று தங்கி வசித்து வந்தார். உடல் நிலை

சரியானதும் ஸ்ரீ பெரியவாள் யாத்திரையில் 1978 முதல் 1984 வரை கலந்து கொண்டு சென்றார். கேம்பில் தரிசனம் செய்ய வரும் ஏழைக்களுக்கு பெரியவாள் உத்திரவு படி வித விதமான பக்ஷ்க்ஷணங்களை தயாரித்து வழங்குவார். மீண்டும் உடல் நிலை பாதிக்கவே ஓர் பகுதி முகாமிலேயே அவரை காஞ்சி மடத்தில் தங்கி இருக்கச் சொன்னார்கள். அவரும் ஸ்ரீ பெரியவாளை தனக்கு சன்னியாஸ்ரமம் வேண்டி பல முறை பிரார்த்தித்துக் கொண்டிருந்தார். அவரது உடல்நிலை மோசமாகி வருவதைக் கண்டு பெரியவாள் அவருக்கு 29.10.78 அன்று ஆபத்ஸன்யாஸம் கொடுக்கச் செய்து காஞ்சிக்கு அனுப்பினார்கள். அவர் திருவாரூர் சென்று தங்கி இருந்தார். மேலப் பூதனூர்பாப்பா என்பவர் அடிக்கடி பெரியவாளை தரிசிக்கும் போது திருவாரூர் ஸ்வாமிகளின் உடல் நிலை பற்றி மஹா பெரியவாளிடம் தெரிவிப்பார்.

ஓர் நாள் மகாபெரியவாள் அவரிடம் நீ தான் இனி திருவாரூர் ஸ்வாமிகளுக்கு வேண்டியதை எல்லாம் செய்ய வேண்டும். சிகை வைத்துக் கொண்டு செய். திருவாரூரில் அல்லது அருகில் அவருக்காக ஓர் சிறு மனையை உன் பெயரில் வாங்கி அவர் ஸித்தி ஆன பிறகு அதல அடக்கம் செய்துவிடு என்றார். 1986ல் மே மாதம் அவர் உடல்நிலை மோசமாக இருந்தது. மேலப்பூதனூர் பாப்பா அவரை அடிக்கடி சென்று பார்த்து தரிசித்து வந்தார். பிறகு அவர் அவ்வூர் சேகர் என்ற வக்கிலிடம் தெரிவித்து ஓர் இடம் வாங்கிக் கொடுக்க கேட்டுக் கொண்டு ஊர் திரும்பினார். ஓர் ஞாயிறு ஏகாதசியின்று காலையில் பாப்பாவின் சகோதரி கூத்தனூரில் உள்ள சரஸ்வதி அம்மனை காரில் சென்று தரிசிக்க கார் ஏற்பாடு செய்து மேலப்பூதனூர் வந்து காலை

6.30 மணி அளவில் காரில் ஏறும் போது திருவாரூர் ஸ்வாமிகள் சித்தி அடைந்ததாக தொலைபேசி செய்தி வந்து அனைவரும் திருவாரூர் சென்றனர். அவரை அடக்கம் செய்ய இடம் சம்பந்தமாக வக்கில் சேகரைப் பார்த்த போது அவர் இடம் ஏதும் கிடைக்கவில்லை என்றார். பின்பு பாப்பா காஞ்சி மடத்திற்கு தொலைபேசி செய்தி மூலம் தகவல் அளித்த போது பெரியவாள் அவரது உடலை மேலப்பூதனூர் என்ற பாப்பாவின் சொந்த ஊருக்கே எடுத்துச் சென்று அடக்கம் செய்ய உத்திரவு கொடுத்தார்.

பிறகு பாப்பா அவரது உடலை மேலப்பூதனூர் எடுத்துச் சென்று அவரது வீட்டின் அருகே வயல் வெளியிலுள்ள குளத்தங்கரையில் பொது ஜனங்கள் ஒத்துழைப்போடு அடக்கம் செய்யப்பட்டது. அவரை அடக்கம் செய்து பல மாதங்கள் கழித்து அந்த இடத்தைப் பற்றி அதன் உரிமையாளர் யார் என பரிசீலித்த போது பாப்பாவின் பெயரில் இருந்த சொந்த இடமே என தெரிந்தது. முக்காலமும் உணர்ந்த தீர்கதரிசியான மஹாபெரியவாள் முன்னதாகவே பாப்பாவிடம் சுவாமிகளுக்கு ஓர் இடம் வாங்கி அவர் ஸித்தி அடைந்ததும் அதில் அடக்கம் செய் என கூறியதை நினைத்து மகிழ்ந்து அவரது தரிசன பாக்கியத்தையும் ஆசியையும் உணர்ந்தார். இன்றும் பாப்பாவின் மகன் நன்கு படித்து நல்ல உத்தியோகத்தில் உள்ளதுடன் அவரும் அடிக்கடி காஞ்சி வந்து அதிஷ்டான தரிசனத்தை செய்து கொண்டு உள்ளார்.

திருவாரூர் வெங்கட்ராம சாஸ்திரிகள்
பெரியவாள் ஸ்ரீ கண்டன் ஏகாம்பரத்துடன் ஸ்நானம்



## (ஸ்ரீ திருக்கருகாவூர் பாட்டு ஸ்ரீராம மூர்த்தி சுவாமிகள்)



தஞ்சாவூர் பாபநாசத்துக்கு அருகில் திருக்கருகாவூர் உள்ளது. 1945ல் மஹா பெரியவாள் இவ்வூரில் வ்யாஸ பூஜை நடத்தி தங்கியிருந்தார்கள். சாதுர் மாஸம் முடிந்து பெரியவாள் கும்பகோணம் வழியாக சுவாமி மலைக்கு பல்லக்கில் சென்ற போது ராமமூர்த்தி ஒரு மாதவ பையனுடன் பல்லக்கின் கூடவே ஓடி சென்றனர். பெரியவாள் இருவரையும் கூப்பிட்டு அவர்களது பூர்விக விபரங்களை கேட்ட அறிந்தார். அப்போது இராமமூர்த்தி பெரியவாளிடம் நான் மடத்தில் உங்களுடனேயே இருக்கலாமா எனக் கேட்டார். பெரியவாள் இரு ஆனால் வேளைக்கு சரியாக சாப்பிட முடியாது, நிம்மதியாக தூங்க முடியாது என்றார். உடனே ராமமூர்த்தி எனக்கு தெரிந்த வேதபுரி இருக்கிறார் அவர் என்னை கவனித்துக் கொள்வார் என்று சொன்னதும் முதன் முதலாக மடத்தின் கைங்கர்யங்களில் தன்னை இணைத்துக் கொண்டார்.

1959ல் பெரியவாள் நசரத் பேட்டை காம்பின் பூஜையில் சந்தனம் அரைக்கும் பணியில் ஈடுபட்டார். ஆனால் அன்று இவருக்கு மார்பு வலி ஏற்பட்டது. உடனே அருகே இருந்த ஓர் டாக்டரிடம் தன்னை பரிசோதித்துக் கொண்டபோது டாக்டர் சில மாத்திரைகளை சாப்பிட சொல்லி இனி கனமான பொருள்களை தூக்கக் கூடாது. குனிந்து வெகு நேரம் பணி செய்யும் சந்தனம் அறைக்க கூடாது என்றார். மறுநாள் பூஜையில் சந்தனம் அறைக்க இவரைக் கூப்பிட்ட போது தனக்கு இருதயவலி உள்ளதையும் டாக்டரின் நிபந்தனைகளையும் தெரிவித்த போது பெரியவாள் பரவாயில்லை சந்தனம் பூஜைக்கு தயார் செய்து கொடு உன்னை சந்திரமௌளீஸ்வரர் பார்த்துக் கொள்வார் என்றார். அதன் பேரில் இருதய சிரமங்கள் இல்லாது 6 வருடங்கள் இவர் பூஜைக்கு சந்தனம் அரைத்துக் கொடுத்துள்ளார்.

1984ல் பெரியவாள் காஞ்சி திரும்பும் போது புதுப்பெரியவாள் பூஜை கேம்பிற்கும் மஹாபெரியவாள் கேம்பு இருக்கும் இடமும் எப்போதும் 10 கி.மீட்டர் தூரத்திலேயே தான் இருந்து வந்தது. அப்போதெல்லாம் பூஜையில் இருந்த ராமமூர்த்தி தான் முதற்கால பூஜைகள் முடிந்த சுவாமி தீர்த்த பிரசாதங்களை மகாசுவாமிகளின் பிக்ஷைக்கு முன் பிரதி தினமும் ஓர் வேனில் எடுத்து வந்து அளிப்பார்.

கேம்புகளில் ஸ்ரீவாஞ்சியம் ராமச் சந்திரஅய்யர் என்ற ஆஸ்தானவித்வான் பெரியவாள் முன்பு அமர்ந்து சங்கித பாட்டுக்களை ரசனையோடு பாடுவார். அவரது

பாட்டுக்களை ரசித்து ராமமூர்த்தி அவர்களும் தனது இனிய குரலில் பாடும் பழக்கம் உள்ளவர். 1943ல் திருவிடை மருதூர் கேம்பில் பரதம் நாராயணசுவாமி என்ற நாட்டிய வித்வான் பெரியவாளை தரிசித்து பதஞ்சலி அஷ்டகம் கவிதையை பாடிக் காண்பித்து இந்த அஷ்டகம் மிகவும் விசேஷமானது. மக்கள் அறிந்து கொள்ளுமாறு பெரியவாள் ஏதேனும் ஏற்பாடுகள் செய்ய வேண்டும் என பிரார்த்தித்துக் கொண்டார். மறுநாள் பெரியவாள் ராமச் சந்திர அய்யர் சங்கீத வித்வானை வரவிழைத்து அவரையும், தனது அருகே இருந்த ராமமூர்த்தி மற்றும் போலகம் கோபாலன் என்ற தொண்டரிடம் பதஞ்சலி அஷ்டகத்தின் பிரதிகளை கொடுத்து தானே அதில் உள்ள எட்டு சுலோகங்களை ராகத்துடனுடம் தாளத்துடனும் பாடிக் காட்டினார்கள் பின்பு அந்த மூவரிடமும் பதஞ்சலி அஷ்டகத்தை மனப்பாடம் செய்து வைத்துக் கொள்ள தெரிவித்தார். மீண்டும் எட்டு வீரப் பட்டண ஸ்தலங்களான கொறுக்கை, பலியலூர், வழுவூர், விற்குடி, திருக்கடையூர், கண்டியூர், திருவதிகை, திருக்கோயிலூர் ஸ்தலங்களுக்கு நான்கு மாதம் பிரதோஷம் தினங்களில் அவர்களை அங்கு சென்று தங்களுடன் மடத்திலிருந்து சங்க வாத்யம் வாசிப்பவர்,சுத்த மத்தளம் வாசிப்பவர்களையும் அழைத்துச் சென்று ராகத்துடன் ராமச் சந்திர அய்யரும் ஒலி எழுப்பவும் முறைப்படி சுத்த மத்தளமும் கொட்டி நிகழ்த்தப்பட்டது.

இதுவே பின்பு ஸ்ரீமடத்தில் பிரதி தினம் மாலையில் தீப நமஸ்காரம் ஆனவுடன் சம்பு நடனஸ்லோகம் பாடும் முறைகடைபிடிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வருகின்றது. பெரியவாள் திருப்பாவை திருவெம்பாவை பிரசாரம்

ஆரம்பித்த காலத்திலேயே பதஞ்சலி சம்பு நடன ஸ்தோத்திரத்தையும் பிரகாசிக்கச் செய்தார்.

திருமடைமருதூரில் பெரியவாள் முகாம் இருந்த போது ராமமூர்த்தி மற்ற கைங்கர்யம் வைதிகர்கள் தங்கியிருந்த கொட்டகையில் ஒரு பெரிய விஷபாம்பு புகுந்துவிட்டது. எல்லோரும் பயந்த போது ராமமூர்த்தி தைரியமாக அதை ஓர் கொம்பால் அடித்து உயிரை போக்கிவிட்டார். செய்தி அறிந்த பெரியவாள் உடனடியாக அதை அருகே உள்ள தோட்டத்தில் புதைத்து விட்டு எல்லோரும் ஸ்னானம் செய்து விட்டு வர தெரிவித்தார்.

1984ல் மூன்று பெரியவர்களும் கர்நூலிருந்து காஞ்சி திரும்பி வந்த பிறகும் ராமமூர்த்தியும் மடத்திலேயே மகா பெரியவாளுடன் இருந்து மக்கள் தரிசன நேரங்களில் பெரியவாளுக்கு தன்னால் முடிந்த கைங்கர்யங்களை செய்து கொண்டும் பூஜை காம்புகள் ஸ்ரீமடத்தில் தங்கி இருந்த போது பூஜைக்கு வேண்டிய உதவிகளை செய்து கொண்டு இருந்தார். பின்பு வயோதிகம் காரணமாக உடல்நிலை பாதிக்கப்பட்டு சன்னியாஸ்ரம ஆஸ்ரமம் பெற்று மடத்திலேயே ஓர் அறையில் சில மாதங்கள் தங்கி 21.8.2002ல் தக்ஷ்க்ஷிணாயினம் ஆவணி 6 சிரவண மாதம் சுக்ல பக்ஷ்க்ஷ சப்தமி அன்று சித்தி அடைந்தார். அவரது அதிஷ்டானமும் உபநிஷத் மடத்திலுள்ளது.



# பரம பூஜ்யஸ்ரீ பூர்ணானந்த இந்திர சரஸ்வதி சுவாமிகள்



**முடி கொண்டான் ஸ்ரீநுவாச சாஸ்திரிகளான இந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அவர்களை பெரும்பாலோர் முடிகொண்டான் சுவாமிகள் என தான் அழைப்பார்கள்.**

இவர் தூப்பல் கிராமத்தில் 4.4.1911ல் அவதரித்தவர். இவரது பூர்வாஸாம தந்தையின் பெயர் ராமபத்ர சாஸ்திரிகள் என்பதும் தாயார் சௌமீனாக்ஷ்க்ஷியும் ஆகும். இவர் குடும்பத்தில் இரண்டாம் மகனாக அவதரித்தவர். இவர் ரத்ன காந்த திக்ஷ்க்ஷதர்வம் சத்தை சேர்ந்தவரும் விஸ்வாமித்திர கோத்திரத்தை உடையவர் ஆவார். இவர் பொது கல்வியில் முடி கொண்டான் பள்ளியில் 8ஆம் வகுப்பு வரை கல்வி கற்று திருவிசைநல்லூர் வேத பாடசாலையில் சேர்ந்து வேத அத்தியானம் செய்தார். சென்னை மைலாப்பூர் ஸமஸ்கிருத கல்லூரியில் வேதாந்தம் கற்று ஆந்திரபிரதேசத்தின் நெல்லூரில் தர்க்க சாஸ்திரம் பயின்றார்.

சாஸ்திர பிரிவில் ஓர் அங்கமான மீமாம்ஸத்தில் இவரது புலமையை பாராட்டி திருச்சி சமஸ்கிருத பரிஷத் என்ற அமைப்பு இவருக்கு மீமாம்ஸோபாய் ஸத்ஸாஸ்திர பிரவீணா என்ற பட்டத்தை வழங்கி கௌரவித்துள்ளது. இவர் காஞ்சி ஸ்ரீமஹாபெரியவாளுடன் பல்வேறு ஸாஸ்திர விகாரங்களில் ஈடுபட்டு நெருங்கியிருந்து ஸன்னியையாஸ திக்ஷ்கைக்ஷயும் காஞ்சியிலேயே பெற்றுக் கொண்டார். இவருக்கு ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் 25.4.75 அன்று காஞ்சி க்ஷேத்திரத்தின் உபநிஷத் பிரம்மேந்திய மடத்தில் சன்னியாஸ ஆஸ்ரம திக்ஷ்கைக்ஷ அளித்து பூர்ணானந்த இந்திர சரஸ்வதி என்ற ஆஸ்ரம பெயரையும் வழங்கினார். இவர் 25ஆண்டு காலம் பல க்ஷேத்திரங்கள் சென்றும் வயது முதிர்ந்த காலத்தில் காஞ்சி சங்கர மடத்திலேயே இருந்து வந்தார்.

ஸ்வாமிகள் மஹா பெரியவாளுடனேயே 40 வருடகாலம் இருந்துள்ளார். பெரியவாள் தன்னை கைவிடமாட்டார் என அடிக்கடி தெரிவிப்பார். ஓர் சமயம் அவருக்கு வயற்றுவலி அதிகமாகி சிரமப்பட்டபோது தன் இஷ்டதெய்வம் வெங்கடாஜலபதியை நினைத்து பிரார்த்தித்த படியே இருந்தார். வலி குறையாதுள்ளபோது நாம் மஹா பெரியவாளை பிரார்த்தித்துக் கொள்ளாது விட்டு விட்டோமே என மனகிலேசம் அடைந்து வருந்தினார். உடனே மஹா பெரியவாள் அவர் மனதில் தோன்றி உனக்கு வலி அதிகமானதும் என்னைவிட்டு விட்டு சுவாமியை நினைத்துக் கொண்டாயே அது மனவருத்தமாக உள்ளதா உன்வலி நீங்கினால் மனவருத்தமும் போய்விடும். நானே வெங்கடாஜலபதியாக வந்து உன்வலியை போக்கினால்

உன் மனது வருத்தம் போகும் என்று கூறியதும் அவரது வயிற்றுவலி நீங்கி மகிழ்ந்தார். அவர் புதுப்பெரியவாளுடன் பாஷ்ய பாடங்களில் கலந்து கொள்ள 5 ஆண்டுகள் அவருடனேயே இருக்க மஹாபெரியவாள் ஏற்பாடு செய்து இருக்கச் செய்தார்.

இறுதி காலங்களில் உடல்நலம் பாதிக்கப்பட்டு மஹா சுவாமிகளின் வருடாந்திர ஆராதனை தினமாக 25.12.2000ல் ஸ்ரீசங்கர மடத்திலேயே சித்தி அடைந்து உபநிஷத் பிரம்மேந்திர மடத்திலேயே அவருக்கு அதிஷ்டானம் அமைக்கப்பட்டு அவர்களது உறவினர்களால் பிரதி வருடம் ஆராதனையும் நடத்தப்படுகிறது.



**ஸ்ரீ முடிகொண்டான் சுவாமிகள்**



மணி மண்டபமும்,
அம்மண்டபம் அமைய காரண கர்த்தாவாக விளங்கிய
திரு. பிரதோஷம் வெங்கட்ராம அய்யர் அவர்களும்





மஹா ஸ்வாமிகள்
பூர்வாஸ்ரம சகோதரர் சிவன்சார்



பாத தரிசனம்
பாபவிமோசனம்

# இதர சன்னியாஸிகள்









